


### ராஜியைப்பற்றி இங்கிலாந்தில் அபிப்பிராயம்.

இர்வின் காந்தி சம்பாஷணையின் பயனாக ஏற்பட்டுள்ள ராஜி ஏற்பாடுபொதுவாக இங்கிலாந்தில் எல்லோராலும் வரவேற்கப்பட்டு திருப்தி வெளியிடப்பட்டிருக்கிறது. மூன்று கட்சித் தலைவர்களும் இதில் திருப்தி வெளியிட்டிருக்கின்றனர். ஆனல் மிஸ்டர் பால்டுவின் எவ்விதமாகவும்தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ளவில்லை மிஸ்டர்சர்ச்சில், லார்டுலாயிடு ஆகியோரும் டெயிலி மெயில் பத்திரிகையும் தான் ராஜி ஏற்பாட்டை எதிர்த்து இதனல் பிரிட்டிஷ் செல்வாக்குப் போய்விட்டதாகக் கருதுகின்றனர். ராஜி ஒப்பந்தம் காமன்ஸ் சபையில் இந்தியா மந்திரியால் ஆஜர் செய்யப்பட்டது. 12-ந்தேதி வியாழக்கிழமை காமன்ஸ் சபையில் இந்திய விஷயத்தைப் பற்றிவிவாதம்நடை பெற்றது.

### சமரஸ ஏற்பாட்டைப் பற்றி புதிய ராஜப்பிரதிநிதி.

லண்டனில் பிரிட்டிஷ் இந்தியச்சங்கத்தினர் 9-ந்தேதி ஏர்ல்வில்லிங்டனுக்கும் அவர் மனைவியாருக்கும் ஒரு விருந்து நடத்தினர். ஏர்ல் வில்லிங்டன் அச்சமயம் பேசுகையில் கூறியதாவது .—இர்வின் காந்தி ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டிருப்பதன் பயனாக மிகவும் முக்கியமான ஒரு சமயத்தில் நான் இந்தியாவுக்குத் திரும்பச் செல்லுகிறேன். இந்த ஒப்பந்தம் இருதரப்பினராலும் கண்ணியமாகவும் உண்மையாகவும் நிறைவேற்றப்படுமென நம்புகிறேன். இந்தியா வெங்கும் இதன் பயனாக அமைதி நல்லெண்ணம் நம்பிக்கை ஆகியவை ஏற்படுமென நம்புகிறேன். இந்த ஒப்பந்தத்தில் சம்பந்தப் பட்டுள்ள எல்லோரையும் நான் பாராட்டுகிறேன். முக்கியமாக ராஜப்பிரதிநிதியை நான் பாராட்ட விரும்புகிறேன். அவர் ஓயாதுமுயற்சியும், பொறுமையும் காட்டியது பெரிதும் போற்றக் கூடியதாகும்.

### இந்திய சர்வகட்சி மகாநாடும் கன்ஸர்வேடிவ் கக்ஷி பகிஷ்காரமும்.

இந்தியாவில் நடைபெறவிருக்கும் சர்வகட்சி மகாநாட்டில் கன்ஸர்வேடிவ் கட்சிப் பிரதிநிதிகள் கலந்துகொள்ளப் போவதில்லையென்ற முக்கிய முடிவுக்கு மிஸ்டர் பால்டுவின் வந்திருப்பதான விஷயம் 9-ந்தேதி கன்ஸர்வேடிவ் கட்சியின் இந்தியக் கமிட்டிக் கூட்டம் காமன்ஸ் சபையில் நடைபெற்றபொழுது வெளியிடப்பட்டது. கூட்டத்தின் முடிவில் வெளியிடப்பட்ட அறிக்கையில், இர்வின் காந்தி சமரஸ ஏற்பாடு விரிவாக ஆலோசிக்கப்பட்டதாகவும் அதன் பின்னர் மிஸ்டர் பால்டுவின் முடிவை வரவேற்பதாகக் கமிட்டி தீர்மானஞ்செய்ததென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பரபரப்பை யுண்டுபண்ணக் கூடிய இந்த முடிவு சென்ற வாரம் இர்வின் காந்தி ஒப்பந்தம் முடிவடையுமுன்னரும் கமிட்டியின் பிரதிநிதிகள் தங்கள் அபிப்பிராயங்களை மிஸ்டர் பால்டுவினிடம் வெளியிட்ட பின்னரும் செய்யப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது. இன்றிரவு செய்யப்பட்ட தீர்மானம் சாதாரணமாகவே இப்பொழுது ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனல் இந்த அறிக்கை பார்லிமெண்டு கோஷ்டியில் மிகுந்த ஆச்சரியத்தை யுண்டுபண்ணிவிட்டது.



கிரீஸ் தேசத்தில் ' கலகா ' என்ற சன்யாஸி மடம் படத்தில் காணப்படும் செங்குத்தான பாறைமேல் கட்டப்பட்டிருக்கிறது இதற்குச் செல்பவர்கள் பெரிய கயிறுகள் மூலம் மேலே ஏற்றப்படுகின்றனர்.

### ஜப்பானிய ராணிக்குப் பெண் குழந்தை.

ஜப்பானிய மகாராணிக்கு 7-ந்தேதி மத்தியானம் ஒரு பெண் குழந்தை பிறந்தது. இது நான்காவது பெண். ஏற்கனவே ஒரு பெண் குழந்தை இறந்துவிட்டது. ஒரு பிள்ளைக் குழந்தை பிறக்கவேண்டுமென்றுமிகவேண்டிப் பிரார்த்தித்ததற்குப் பலனேற்படாததுபற்றி மிகுந்த ஏமாற்றம் வெளியிடப்படுகிறது. சென்ற 6 வருஷங்களில் இவ்விதம் பிள்ளை பிறக்குமென எதிர்பார்த்து முடிவில் பெண் பிறந்து ஜனங்களுக்கு ஏமாற்றமேற்பட்டிருக்கிறது. மன்னருக்குப் புத்திர சந்ததி யேற்பட வேண்டுமென்ற அவா அவ்வளவு அதிகமாக விருந்திருக்கிறது.

### சார்லி சாப்ளின் ஜப்பான் பிரயாணம்.

சார்லி சாப்ளின் சமீபத்தில் ஜப்பான் செல்லுவார். பம்பாய் கல்கத்தா மார்க்கமாக அவர் செல்லக்கூடுமெனத்தெரிகிறது. பிரான்ஸ், ஸ்பெயின், ஜெர்மனி ஆகிய தேசங்களைப்பார்த்துவிட்டு எப்ரல்மாத ஆரம்பத்தில் அவர் ஜப்பான் செல்லக்கூடும். இந்தியா வழியாகச் செல்லுவதா, அல்லது ஸைபீரியா வழியாகச் செல்லுவதாவென்பதை அவர் இன்னும் முடிவுசெய்யவில்லை.

### கன்ஸர்வேடிவ்களுக்குள் பிளவு.

வெஸ்டு மின்ஸ்டரில் பார்லிமெண்டிற்கு நடைபெறவிருக்கும் இடைத்தேர்தலில் சுயேச்சைக் கன்ஸர்வேடிவ் அபேக்ஷகராக நிற்கும் ஸர் ஏர்னஸ்டு பெட்டரும் அவரை ஆதரிப்பவர்களான லார்டு ராதர்மிர், லார்டு பீவர்புருக் முதலியோரும், இப்பொழுது எதிர்த்துத்தேர்தல் நடத்துவதானது அதிகப் பிரசங்கிகளாயும் பொறுப்பற்றவர்களாயுமிருக்கும் பணம்மிகுந்த வகுப்பினர் ஒரு பெரிய கக்ஷியின் தலைமையும் கொள்கையும் எவ்விதம் நடத்தப்பட வேண்டுமென்று ஆக்ஞாபிப்பதாகவே யிருக்கிறதென்று மிஸ்டர் பால்டுவின் குறிப்பிட்டார். பொதுத் தேர்தலுக்குப் பின் நடைப்பெற்றுள்ள இடைத் தேர்தல்களில் இத்தேர்தல்தான் மிகுந்த பரபரப்பையுண்டுபண்ணுவதாகவிருக்கிறது. இது கன்ஸர்வேடிவ்களுக்குள்ளிருக்கும் இரண்டு போட்டிக் கோஷ்டிகளுக்குள் நடக்கும் போராட்டமாகவிருக்கிறது. மிஸ்டர் ஆல்பிரட் டப் லைப்பர் கன்ஸர்வேடிவ் கக்ஷி அபேக்ஷகராகவும், ஸர் ஏர்ன்ஸ்டு பாட்டர் சுயேச்சைக் கன்ஸர்வேடிவ் அபேக்ஷ

•கராகவும் நிற்கின்றனர். மிஸ்டர் பால்டுவின் தலைமைப் பதவியை விட்டுவிடுமாறு நோட்டீஸ் கொடுக்கவேண்டித் தம்மைத் தேர்ந்தெடுக்குமாறு ஸர் எர்னஸ்ட் பாட்டர் தமது வோட்டர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

---

### பிரிட்டிஷ் கவர்ன்மேண்டு செலவு திட்டம்.

அடுத்த வருஷத்திற்கான பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் செலவு திட்டங்கள் எல்லாம் இப்பொழுது வெளியிடப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து சுமாராகக் கவர்ன்மெண்டின் வரவு செலவு திட்டத்தின் தன்மையை நாம் உணரக்கூடும். ராணுவம் முதலிய காப்புப் படைகளுக்காக 1096 லக்ஷம் பவுன் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது சென்ற வருஷத்திய செலவுதிட்டத்தைவிட 45000 பவுன் குறைவாகும். ஸிவில் இலாகா செலவினங்களுக்கு 317411000 பவுன் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது 220 லக்ஷம் அதிகப்படியாகிறது. ரெவினியூ இலாகாக்களுக்காக 1156800 பவுன் செலவாகிறது. இதில் 546000 பவுன் குறைவாகிறது. ஆகமொத்தம் செலவு 439015000 பவுனாகிறது. இது சென்ற வருஷத்தைவிட 21106000பவுன்அதிகமாகிறது கடன் பாவத்திலும் அமானத்திலும் எவ்வளவு ஒதுக்கப்படுகிற தென்பது வரவு செலவு திட்டம் வெளியானாலல்லது திட்டமாகக் கூறுவதற்கில்லை. அது சென்ற வருஷம் போலவே யிருக்குமானால், பொக்கிஷ மந்திரி 8080 லக்ஷம் பவுனுக்கு வருமான மேற்படுத்த வேண்டும். சென்ற வருஷம் 7870 லக்ஷம் பவுன்தான் வருமானம் எதிர்பார்க்கப்பட்டது. இதில் தபால் இலாகா செலவு சேர்க்கப்படவில்லை. இவ்விலாகா தனது செலவைச் சரிக்கட்டிக் கொள்ளுவதாக விருக்கிறது. தேசியக் கடன் விஷயத்தில் புதிய திட்டத்தில் செலவு மிகவும் குறைவாக விருக்குமென்று தெரிகிறது. ஆனால் சேமிப்பு நிதிக்கு 50 லக்ஷம் போட்டு வருவதை இப்பொழுது 600 லக்ஷமாக உயர்த்த வேண்டுவது சட்டப்படி பொக்கிஷ மந்திரியின் பொறுப்பாக விருக்கிறது.

---

### ஜூகோஸ்லேவியாவில் பூகம்பம்.

8ந் தேதி பால்கன் பிரதேசம் முழுவதிலுமேற்பட்ட பெரிய பூகம்ப அதிர்ச்சியில் தென் ஜூகோஸ்லேவியா மிகவும் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது. இங்கு உயிர்ச் சேதமும் மிகவும் அதிகமாக விருக்கிறது. பாதகமடைந்துள்ள ஜில்லாக்களுடன் தந்தி டெலிபோன் போக்கு வரத்துக் கெட்டுப் போய்விட்டபடியால் பூர்ண தகவல் கிடைக்கவில்லை. பல்கேரிய கிரீஸ் எல்லைப் புறங்களில் குறைந்தது 150 பேர்களாவது இறந்திருக்கவேண்டு மென்று தெரிகிறது. 300 பேர் இறந்து விட்டதாகச் சிலரிடமிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. 500 பேர்கள் வரையில் காயமடைந்திருக்கின்றனரென்று நிச்சயமாகத் தெரிகிறது. 1000 வீடுகள் போல் விழுந்து விட்டன. ஸெண்டு ரூமினிட்யா நகரம் அநேகமாக அழிந்து விட்டதென்னலாம்.

---

### தொழில் கக்ஷியில் மேற்கொண்டு ராஜிநாமா.

•மிஸ்டர் டபிளியூ. ஜெ. பிரௌன் என்ற மற்றொரு தொழிகட்சியங்கத்தினர் கட்சியினின்று ராஜிநாமாச் செய்து விட்டார். அவர் மிஸ்டர் மாக்டொனால்டுக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் தொழில் கக்ஷியில் அங்கத்தினராக நீடித்து வருவது ஒழுக்கத்திற்கு ஒத்ததாக மனதிற்குப் படவில்லையென அறிவித்திருக்கிறார்.

பார்லிமெண்டு மெம்பரான லேடி ஸிந்தியா மாஸ்லி பார்லிமெண்டு தொழில் கக்ஷியினின்று ராஜிநாமாச் செய்துவிட்டார். லேடி ஸிந்தியா லார்டு கர்ஸனின் புத்திரி. ஸர் ஆஸ்வால்டு மாஸ்லியின் புதிய அரசியல் கக்ஷியை இவர் ஆதரிக்கிறார்.



லண்டன் மிருகக்காட்சி சாலையில் சமீபத்தில பிறந்த மூன்று சிங்கக்குட்டிகள்.

---

### பட்டு ஜரிகை வரிக்கு பிரஞ்சு கவர்ன்மேண்டின் ஆக்ஷேபம்.

இந்தியாவில் பட்டு ஜரிகை ஆகியவற்றின்மீது இந்தியா கவர்ன்மெண்டார் இறக்குமதி வரியை அதிகரித்திருப்பதை ஆக்ஷேபித்து இந்தியா கவர்ன்மெண்டிற்குச் செய்தியனுப்ப வேண்டுமென்று அன்னிய நாட்டு மந்திரியை வியாபார மந்திரி கேட்டுக்கொண்டிருக்கிறார். இந்த அதிகரிப்பினால் பிரஞ்சு வியாபாரத்திற்கு மிகுந்த பாதக மேற்படக்கூடுமென்றும், அவசியமேற்பட்டால் சந்தர்ப்பத்திற்கனுகுணமாகப் பிரஞ்சுக் கவர்ன்மெண்டார் பாதுகாப்பு முறைகளையனுஷ்டிக்கவேண்டி வருமென்றும் அன்னியநாட்டு மந்திரி இந்தியா கவர்ன்மெண்டிற்கு அறிவித்திருப்பதாக உத்தியோகத் தோரணையில் அறிவிக்கப்படுகிறது.

---

### எகிப்தில் அன்னிய ஆடை பஹிஷ்காரம்.

இங்கிலாந்துடன் சிநேகமாக விருப்பதென்ற கொள்கையை மாற்றுவதில் முதல் படியாகவும், ஒரு புதிய தேசீயக்கொள்கையை அனுஷ்டிப்பதற்காகவும், எகிப்தில் சுதேசி ஆடைகளையே அணிவதென்பதைத் தாங்கள் முதல் வேலைத்திட்டமாக அநுஷ்டிப்பதென வாப்துக் கக்ஷியினர் தீர்மானித்திருக்கின்றனர்.

'அல் அராம்' பத்திரிகை எழுதுவதாவது:— வாப்துக் கக்ஷியினர் அந்தரங்கக்கூட்டங்களை நடத்தி வருகின்றனர். நிர்வாக சபையின் தீர்மானத்தை நிறைவேற்றவும் இப்பொழுதுள்ள கவர்ன்மெண்டு நீடிப்பதற்கெதிராகப் பிரசாரஞ் செய்யவும் தேசமெங்கும் கமிட்டிகளை ஏற்பாடு செய்யக் கக்ஷி உத்தேசித்திருக்கிறது.

---

### மோரிஸ் தீவில் பெரிய புயல்.

மோரிஸ் தீவுக் கவர்ன்மெண்டார் பின்வரும் தந்தியைக் குடியேற்ற நாட்டு மந்திரிக்கறிவித்திருக்கிறார்:— மார்ச்சு 5-ந்தேதிமோரிஸ்தீவில்மிகவும் பலமான புயல் அடித்தது. கட்டிடங்களுக்கு மிகுந்த சேதமேற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சர்க்கரைப் பயிருக்கு விசேஷச் சேதமேற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. உயிர்ச்சேத விஷயத்தைப்பற்றி ஒன்றும் திட்டமாக அறிவிப்பதற்கில்லை. இன்னும் காற்று மிகவும் பலமாக அடித்து வருகிறது. தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டிருக்கின்றன. ரயில் போக்குவரத்து மிகவும் கஷ்டமாக விருக்கிறது.

கவர்னர் வடதேசத்தில் சுற்றுப்பிரயாணஞ்செய்துவிட்டுத் திரும்பினார். மொத்தம் 136 பேர்களுக்கு உயிர்ச்சேதமேற்பட்டிருக்கிறது. இதில்நால்வர் ஆஸ்டிரேலியர். கவர்ன்மெண்டு சொத்துகளும் தனிப்பட்டவர் சொத்துகளும் மிகுந்த சேதத்திற்குட்பட்டிருக்கின்றன. எல்லாவிடங்களிலும் கஷ்ட நிவர்த்தி செய்யப்பட்டுவருகிறது.

---

### ஆஸ்வால்டு மாஸ்லி வெளியேற்றப் பட்டார்.

தொழில் கட்சித்தேசீய நிர்வாக சபையின் கூட்டத்தில், ஸர் ஆஸ்வால்டு மாஸ்லி முன்னிலும் கட்சிக்குத் துரோகமாக நடந்து கொண்டதாக அவரைக் கட்சியினின்று வெளியேற்றுவதென முடிவு செய்யப்பட்டது. ஸர் ஆஸ்வால்டு மாஸ்லியின் புதிய கட்சியில் சேருவது தொழில் கட்சியின் அங்கத்தினராக விருப்பதற்குஒத்ததல்லவென்றும்இக் கமிட்டியில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

---

### இர்வினைப்பற்றி லார்டு ரீடிங்கின் பாராட்டுதல்

பிரிட்டிஷ் இந்தியச் சங்கத்தில் மாஜி ராஜப்பிரதிநிதியான லார்டு ரீடிங்கும், புதிய ராஜப்பிரதிநிதியான ஏர்ல் வில்லிங்டனும் இந்திய ராஜியைப்பற்றிக் குறிப்பிட்டனர். லார்டு ரீடிங் பேசுகையில் ஒப்பந்தத்தைக் கண்டிப்பதைத் தாம் ஒப்புக்கொள்ளவில்லை யென்றும் ராஜியின் முடிவு லார்டு இர்வினின் உண்மையான நோக்கம், தைரியம், பொறுமை ஆகியவற்றிற்கு அறிகுறியாக விருக்கிறதென்றும், சமாதானத்தை யுண்டுபண்ணித்தப்பினவருக்குச்சுலபமான வழியையுண்டுபண்ணியதில் தம் தேசத்தில் பலத்த எதிர்ப்பேற்படுவதற்குக் கூட அவர் தயாராகிவிட்டாரென்றும் சொன்னார்.

லார்டு வில்லிங்டன் பிறகு பேசுகையில், சிலர் லார்டு இர்வினை எதிர்ப்பது தற்காலம் பல பொதுப் பிரச்னைகளிலும் மிகுந்த தீராச் சந்தேகமிருப்பதையே காட்டுகிறதென்றும், 'தாம் அவ்விதத் தீராச் சந்தேகம் கொள்ளாதது மாத்திரமில்லாமல் இந்த ஒப்பந்தம் இருதரப்பினராலும் உண்மையாக நிறைவேற்றப்பட்டு இந்தியாவெங்கும் இதன் மூலம் நம்பிக்கை யேற்படக்கூடுமென்று சொன்னார்.

# இந்திய வர்த்தமானம்

## ஸமரஸ ஒப்பந்தம்

காந்திஜி-இர்வின் சம்பாஷணைகளால் ஏற்பட்ட ஸமரஸ ஒப்பந்தம் சென்ற 5-ந் தேதி மாலை கவர்ன்மெண்ட் அறிக்கையாக வெளியிடப்பட்டது. அந்த ஒப்பந்தத்தை யொட்டி காங்கிரஸ் காரியக் கமிட்டியும் சட்டமறுப்பு இயக்கத்தை நிறுத்தி அன்னியத்துணி பஹிஷ்காரம், கள்ளுக்கடை மறியல் முதலிய காரியங்களை நடத்தும்படியான முறையை வெளியிட்டிருக்கின்றனர். மகாத்மா காந்தி முதலிய காங்கிரஸ் தலைவர்கள் ஒப்பந்தத்தை விவரித்துப் பலவிடங்களிலும் பிரஸங்கம் செய்தனர். ஸர்தார் வல்லபாய் படேல் பம்பாய் வந்து சேர்ந்தார். மகாத்மா காந்தி ஆமதாபாத் போய்ச் சேர்ந்தார். ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாசாரியார் சென்னைக்கும், ஸ்ரீமான் ஸென்குப்தா வங்காளத்திற்கும்போய்ச்சேர்ந்துபொதுக்கூட்டங்களில் பிரஸங்கம் செய்தனர். எல்லைப்புறக் காந்தியென்று கூறப்படும் அப்துல்காபுர்கான் விடுதலையடைந்தார். நாடெங்கும் ஸமரஸக் கொண்டாட்டக் கூட்டங்களும் ஊர்வலங்களும் நடந்தன. மகாத்மாகாந்தி எல்லாவிடங்களிலும் உற்சாகமாக வரவேற்கப்பட்டார். ஆமதாபாத்தில் ஆலைச் சொந்தக்காரர்களால் ரூ.51000-மும் பொதுக்கூட்டத்தில் ஒரு தங்கத் தக்ளியும் ரூ. 70000-மும் அவருக்குப் பரிசளிக்கப்பட்டது.

ஒப்பந்தத்தின்சில பிரதான நிபந்தனைகள் பின் வருமாறு:-

சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்பட வேண்டும். லண்டன் ஸாவகக்ஷி மகாநாட்டில் பொதுவாக முடிவு செய்யப்பட்ட இந்திய சமஷ்டி அரசியல் கொள்கைக் குட்பட்டும், இந்திய ஜவாப்தாரித்வ கொள்கையை ஒப்புக்கொண்டும், இந்திய ஸ்வதந்தரத்திற்கும் நன்மைக்கும் ஏற்றவாறு அவசியமான பாதுகாப்புகளை இயற்றி இந்திய அரசியல் திட்டத்தை நிர்ணயிக்க காங்கிரஸ் இனிமேல் இந்தியாவில் நடக்கும் ஸர்வகக்ஷி மகாநாட்டில் கலந்து கொள்ள காங்கிரஸ்காரர்கள் சம்மதித்தனர். இந்தப் பாதுகாப்புகளும் பந்தோபஸ்துகளும் தேசப்பாதுகாப்பு, வெளிநாட்டுச் சம்பந்தம், சிறுபான்மையோர் நிலைமை, முதலிய விஷயங்களைப்பற்றினவைகளாகும். இந்தியாவின் செல்வ சம்பந்தமாகவும் அவசியமான பாதுகப்புகள் செய்யப்படும். இந்தியத்தொழில்களுக்கு ஆதரவளித்துப் பிரசாரம் செய்வதைக் கவர்ன்மெண்டார் ஒப்புக் கொண்டனர். அன்னியஜவுளி மறியலையும் கள்ளுக்கடை மறியலையும் சாத்வீக முறையில் எவ்வித பலவந்தமும் உபயோகிக்காமல், சட்டத்தை மீருமலும் இடையூரில்லாமலும் நடத்துவதைக் கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டனர். துணியைத் தவிர இதர சாமான்கள் சம்பந்தப்பட்ட வரையில் ராஜீயத துறையில் பிரிட்டிஷ் சாமான்களைக் குறிப்பிட்டு பஹிஷ்கரிப்பதைவிட்டு விட காங்கிரஸ்காரர்கள் ஒப்புக் கொண்டனர். ஆனல் இது பொதுவாக இந்தியத் தொழில் பொருளாதார நிலைமை இவைகளின் அபிவிருத்திக்காக இந்தியத் தொழிலுக்கு விசேஷ ஆதரவளிக்கத் தூண்டுவதையும் பிரசாரம் செய்வதையும் தடை செய்யவில்லை. போலீஸ் அதிக்கிரமங்களைப்பற்றி பஹிரங்க விசாரணை செய்தால் ஒருவர் மேல் ஒருவர் குறை கூறிக் குற்றம் சாட்டி மனஸ்தாபமுண்டாகக் கூடுமென்று பஹிரங்க விசாரணை நிபந்தனையை மகாத்மா காந்தி வற்புறுத்தவில்லை. பலாத்காரத்தில் சம்பந்தப்படாத சட்டமறுப்பு சம்பந்தமாகச் சிறை சென்ற ராஜீயக் கைதிகள் விடுதலை செய்யப்பட வேண்டும். சட்டமறுப்பியக்கத்தில் சம்பந்தப்படாத பர்மா புரட்சி அவசரச் சட்டத்தைத் தவிர மற்ற அவசரச் சட்டங்கள் ரத்து செய்யப்பட வேண்டும். விசாரணை முடியாத சட்டமறுப்பு சம்பந்தமான வழக்குகள் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்படும். ஜாமீன் நடவடிக்கைகளும் வசூலிக்கப்படாத அபராதங்களும் ரத்து செய்யப்படும். வக்கீல் தொழில் சட்டப்படி எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்படும். தண்டப் போலீஸ்படை அதிகரிப்புகள் ரத்து செய்யப்படும். சட்டமறுப்பு இயக்கசம்பந்தமாகப் பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்கள் கவர்ன்மெண்ட் வசமிருப்பின் திருப்பிக் கொடுக்கப்படும். அந்தந்த ஜில்லாக்களில் கிராம வாஸிகள் வரிகொடுக்க முடியாமலிருக்கும் நிலைமையிலிருந்தால் அந்தந்த ஜில்லாக்களில் கலெக்டர்கள் வரிகளை வஜா செய்யவோ, வசூலிப்பதைத் தாமதிக்கவோ தகுந்த ஏற்பாடுகளைச் செய்வார்கள். சொத்து சேத மடைந்ததற்குப் பரிகாரங்கள் செய்யப்படமாட்டாது. ராஜிநாமா செய்த கவர்ன்மெண்ட் உத்யோகஸ்தர்கள் ஸ்தானங்கள் காலியாகவிருந்தால் திருப்பி அவர்களே நியமிக்கப்படுவர். ஏழைகள் உள்ளூருக்குள் உப்பு சேகரித்து உள்ளூரில் விற்பனை செய்யவோ உபயோகிக்கவோ அனுமதிக்கப்படுவார். ஆனல் வெளியூர்களுக்கு உப்பை விற்பனை செய்யக் கூடாது.

ஒப்பந்தப்படி பல ராஜீயக் கைதிகள் விடுதலை செய்யப்பட்டனர். விசாரணை முடியாத சட்ட மறுப்பு சம்பந்தமான பல வழக்குகள் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டன. சட்டமறுப்பு சம்பந்தமாகப் பிறப்பிக்கப்பட்ட பல தடையுத்தரவுகள் ரத்து செய்யப்பட்டன. பல காங்கிரஸ் ஸ்தாபனங்களை சட்டவிரோதமென்று அறிவித்த எல்லா மாகாண கவர்ன்மெண்ட் விளம்பரங்களும் ரத்து செய்யப்பட்டன. ஒப்பந்த காலத்தில் அமுலிலிருந்து வந்த அவசர அச்சுச் சட்டமும், வரிகொடாமையைத் தடுக்கும் அரசிறை அவசரச் சட்டமும் ரத்து செய்யப்பட்டன.

இந்த ஒப்பந்தத்தை யொட்டி சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப்பட்டு ஸாத்வீக முறையில் காங்கிரஸ் காரியக்



சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் நடந்த ஸமரஸக் கொண்டாட்டக் கூட்டம். P.P.B.



திருவல்லிக்கேணிக் கூட்டத்தில் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாசாரியார் பிரஸங்கம் செய்த காட்சி. P.P.B.

கமிட்டியின் உத்தரவுபடி அன்னியஜவுளி மறியலும் கள்ளுக்கடை மறியலும் காங்கிரஸ் தொண்டர்களால் நடத்தப்படும். பம்பாயில் தேச சேவிகிகள் வசம் மறியல் வேலை ஒப்புவிக்கப்பட்டது. ஆமதாபாதில் கள்ளுக்கடை மறியலைத் தீவிரமாகவே நடத்தத் தீர்மானித்திருக்கின்றனர். குண்டூரிலும் நெல்லூரிலும் இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகும் போலீஸார் ஸமரஸக் கொண்டாட்டக் கூட்டங்களைத் தாக்கிக் கலைத்தனர். குண்டூரில் கொண்டா வெங்கடப்பய்யா கைது செய்யப்பட்டு சென்ற திங்கட்கிழமை விடுதலை செய்யப்பட்டார். ஸ்ரீமான்கள் சத்யமூர்த்தி, பிரகாசம் முதலிய விடுதலை யடைந்த தலைவர்களும் தொண்டர்களும் ஸ்திரீ தொண்டர்களும் சென்னைக்கு வந்து சேர்ந்தார்கள். சென்னையில் அவர்கள் உற்சாகமாக வரவேற்கப்பட்டுப் பொதுக்கூட்டங்கள் நடந்தன.

---

### இந்தியா சட்டசபை.

5-ந் தேதி இந்தியா சட்ட சபையில் வரவு செலவு திட்டத்தைப்பற்றி விவாதம் நடந்தது. 7-ந் தேதியன்று சர்வ கட்சி மகாநாட்டைப் பற்றி விவாதம் தொடர்ந்து நடந்தது. ஆனால் தீர்மானம் ஓட்டுக்கு விடப்படவில்லை. 9-ந் தேதியன்று எதிர்க்கட்சித் தலைவரான திவான்பகதூர் டி. ரங்காச்சாரியார் பின்கண்ட பிரேரணையைப் பிரேரித்தார்:- கவர்ன்மெண்டிற்கும் காங்கிரஸுக்கும் ஒரு உடன்பாடு ஏற்பட்டு விட்டதைக் குறித்து இந்தச் சட்டசபை தனக்கேற்பட்டுள்ள மிகுந்த திருப்தியையும், இது இந்தியாவின் ராஜீய பொருளாதார சுதந்தரத்தைப் பெறுவதற்கு உபயோகமாக இருக்கும் நல்ல ஒத்துழைப்புடன் கூடிய புதிய சகாப்தத்தை ஆரம்பிக்குமென்ற தனது நம்பிக்கையையும் பதிவு செய்கின்றது." தீர்மானம் ஏக மனதுடன் நிறைவேறியது.

எல்லா இலாகக்களிலும் போதிய சிக்கனத்தைச் செய்யத் தவறிவிட்டதை கவர்ன்மெண்டின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்காக மான்யத்தில் 100 ரூபாய் குறைக்க வேண்டுமென்ற பிரேரணையைத் தேசீயக் கட்சி சார்பாக ஸ்ரீமான் டி ரங்காச்சாரியார் பிரேரித்தார். இதற்குச் சாதகமாக 69 ஓட்டுகளும் பாதகமாக 33 ஓட்டுகளு மிருந்ததால் இது நிறைவேறியது.

புதன்கிழமையன்று நடந்த சட்டசபைக் கூட்டத்தில் ராணுவ இலாகா மான்யத்தில் 100 ரூபாய் குறைக்க வேண்டுமென்று ஒரு பிரேரணை கொண்டுவரப்பட்டது. இது சம்பந்தமாக விசேஷ விவாதம் நடந்தது. அங்கத்தினர்கள் ராணுவ செலவு குறைக்கப்பட வேண்டுமென வற்புறுத்தினர். ஸ்ரீமான் ராமஸ்வாமி முதலியார் கவர்ன்மெண்டார் சிக்கனமில்லாமல் செலவழிப்பதை எடுத்துக்காட்டி ராணுவ விஷயத்தையும் கவனிப்பதாக விருந்தால்தான் சிக்கனக்கமிட்டி நியமிக்கலா மென்றும் இல்லாவிட்டால் சிக்கனக்கமிட்டியே வேண்டியதில்லை யென்றும் கூறினர். கடைசியில் ஸர் ஜார்ஜ் ஷூஸ்டர் ராணுவக் கொள்கையைப் பரிசீலனை செய்யாமல் ராணுவத்தை சிக்கன முறையில் நடத்துவதைப்பற்றி மட்டும் யோசிப்பதானால் இவ்விஷயத்தையும் சிக்கனக் கமிட்டி யோசிக்க அநுமதித்திருப்பதாகக் கூறினார். அதன் பின் ராணுவச் செலவைக் குறைக்கும் பிரேரணை வற்புறுத்தப்பட்டு ஓட்டுக்கு விடப்பட அது நிறைவேறியது.



கோகலே ஹாலில் டாக்டர் பெஸண்டு அம்மையின் தலைமையின் கீழ் நடந்த சென்னை மாணவர் கூட்டத்தின் போது எடுத்த படம். P.N.A.



பம்பாய் மிருக காட்சியில் சிறுவர் மட்டக் குதிரைப் பந்தயத்தில் வெற்றி பெற்ற மாஸ்டர் ஸைக்ஸ். P.P.A.

---

### இராஜாங்க சபை.

இராஜாங்க சபையில் ..-ந் தேதி வரவு செலவைப்பற்றி பொதுவிவாதம் நடந்தது. 9-ந் தேதியன்று முதல் குற்றவாளிகளை நடத்தும் விஷயத்தில் இங்கிலாந்திலுள்ளதைப்போல நடத்தவேண்டுமென்று ஜி. நாராயணசாமி செட்டியார் தீர்மானங் கொண்டு வந்து வாபீஸ் பெற்றார். கலப்படநெய் வியாபாரத்தைக் குற்றமுள்ளதாகச்செய்யக் கொண்டுவரப்பட்ட தீர்மானம் தோற்றது. 10-ந்தேதியன்று சர்வ கட்சி மகாநாட்டைப் பற்றி ஸர் சங்கரன் நாயர் கொண்டு வந்த தீர்மானம் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டது.

---

### கவர்ன்மெண்டின் பணக் கஷ்டம்.

ஐக்கிய மாகாணத்தின் செல்வநிலைமை சந்தேகமானதாக இருப்பதை முன்னிட்டு, உள்நாட்டு மெம்பரான கனம் சத்ரி நவாப் ஏப்ரல் மாதம் முதல் தேதி முதல் சட்டப்படி மாதம் 5333 ரூபாய் சம்பளமாகப் பெறுவதை விட்டுவிட்டு மாதம் 4000 ரூபாயே சம்பளமாகப் பெறுவார். 1923ம் வருஷத்தில் பணமுடை ஏற்பட்டிருக்கையில் சத்ரி நவாப் தமது சகாவான ராஜா பரமானந்தருடன் சேர்ந்து மாதம் 3000 ரூபாயே சம்பளமாகப் பெறுவதாக ஒத்துக்கொண்டார். அது முதல் ஐக்கியமாகாண மந்திரிகளது சம்பளம் 3000 ரூபாயாக இருந்து வருகிறது.

---

### மத்திய மாகாண மந்திரிகள் சம்பளம் குறைக்கப்பட்டது.

மத்திய மாகாண சட்ட சபையின் வரவு செலவு கூட்டத்தின் கடைசி நாளாகிய 9ந் தேதி மந்திரிகளுடைய சம்பளத்திற்காகக் கோரப்பட்ட ரூ96000 பணத்தில் 42000 பணம் குறைக்கப்பட்டது. இனி மந்திரிகள் மாதம் 2250 சம்பளமாகப் பெறுவார்கள். ஸ்ரீமான் கேல்கி இந்த மான்யத்தில் 42000 ரூபாய் குறைக்க வேண்டுமென்ற பிரேரணையைக் கொண்டு வந்தார். இது ஜன நாயகக் கட்சித் தலைவரால் ஏற்கப்பட்டது. மந்திரிகள் இக்கட்சியைச் சேர்ந்தவர்கள்.

---

### பர்மா சட்ட சபை வேண்டுகோள்.

பர்மா சட்ட சபையின் கூட்டத்தில் பர்மாவுக்கு ஜவாப்தாரியான ஆட்சி வழங்க ஒரு அரசியலை நிர்ணயிகக்கூடிய சர்வகட்சி மகாநாடு ஒன்றை தனியாக லண்டனில் சீக்கிரத்தில் நடத்தவேண்டுமென்றும், அதற்கு எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளும் வரவழைக்கப்பட வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சுயவாட்சிக் கட்சியினர் மட்டும் இத்தீர்மானத்துக்கு விரோதமாயிருந்தனர். கவர்ன்மெண்டார் நடுநிலைமை வகித்து விட்டனர்.

4-ந்தேதி சட்டசபை நிராகரித்து விட்ட கிரிமினல் திருத்தச் சட்ட மசோதாவைப்பற்றி மீண்டும் ஆலோசிக்கும்படி கவர்னர் அனுப்பிய செய்தியைத் தலைவர் படித்தார். சபையார் இன்னும் அம்மசோதாவை மறுபடி கொண்டுவர ஹோம்மெம்பருக்கு அனுமதிகொடுக்கவில்லை. 11 ஓட்டுகள் அதிகமாகக் கவர்ன்மெண்டுக்கு எதிர் தரப்பில் கிடைத்தன. இத்துடன் சபை ஒத்திவைக்கப்பட்டது.

---

### பகத்சிங் விஷயம்.

பஞ்சாப் சதி வழக்கு எதிரிகளில் 25பேர் பகத்சிங்கு, சுகதேவ், ராஜ்குரு ஆகியவர்கள் சாட்சி விசாரணை முடியும்

(27-ம் பக்கம்பார்க்க)




டாக்டர், "குழந்தையை அழவிடக் கூடாது. அவனுக்கு ஏதாவது வேண்டுமானால் கொடுப்பது தானே!"

தந்தை, "அவனுக்கு ஒரு நிஜமான யானைவேண்டுமாம்."

---

கனவான், "ஏன் வருந்துகிறாய்? நாலணா கொடுத்தால் நல்ல சாப்பாடு கிடைக்கிறது."

பிச்சைக்காரன், "அந்த நாலணாவிற்குத் தான் வருந்துகிறேன்."

---

சட்டசபை அபேக்ஷகர் (கூட்டத்தில் பிரசங்கம் செய்யும்போது ஏற்பட்ட சந்தடியைப்பார்த்து) "இந்தக் கூச்சலில் நான் பேசுவதுகூட எனக்குக் கேட்கவில்லை"

கூட்டத்திலிருந்த ஒருவர், "அதனால் ஒன்றும் நஷ்டமில்லை. வருத்தப்படாதே!"

---

மானேஜர் "முன்னிருந்த வேலையை ஏன் விட்டுவிட்டாய்"?

வேலைக்காக வந்தவன் "நான் விடவில்லை. அதுவாகவே விட்டு விட்டது"

மானேஜர் "அதெப்படி ?"

வேலைக்காக வந்தவன், "முன்பு நான் வெடிமருந்து செய்யும் சாலையில் வேலை செய்து கொண்டிருந்தேன்".

---

காதலன், "உனக்குச் சமையல் செய்யத் தெரியுமா?"

காதலி, "சமைப்பதற்குச் சாமான்கள் வாங்கிக் கொடுக்கக்கூடுமா என்ற கேள்விக்கு முதலில் பதில் சொல்லு".

---

மாஜிஸ்டிரேட், "என்ன நடந்தது?"

சாக்ஷி, "அவனை இவன் திட்டினான், அவன் இவனை அடித்தான். இவன் அவனைக் கடித்தான். அவனுக்கும் இவனுக்கும் சண்டை நடந்தது. அவனை இவன் கொல்லாவிட்டால் அவன் இவனைக் கொன்றிருப்பான்."

---

முதல் நண்பன், "வேனு முன்போல் அவ்வளவு பெரிய மடையனல்ல."

இரண்டாவது நண்பன், "ஏன்?"

முதல் நண்பன், "இப்பொழுது சிறிது இளைத்து விட்டான்."

---



மிருச்சகடி நாடக ஸினிமாப் படக்காக்ஷிகள்.

கெடியார வேலைக்காரன், "நல்ல காலமாக எல்லாக் கருவிகளையும் மறக்காமல் எடுத்து வந்திருக்கிறேன்."

வீட்டுக்காரன், "என் வீட்டில் கெடியாரம் ரிபேர் செய்ய யாரும் உன்னை அழைக்கவில்லையே. ஒரு வேளை அழைத்தவரின் விலாஸத்தை மறந்து விட்டாய்போலும்."

---

"உன் எஜமான் கடன் கொடுத்திருக்கும் இடங்களிலிருந்து வட்டி வசூலித்து வருகிறாயா! நல்ல வேலை! உன்னைக் கண்டால் ஒவ்வொருவரும் வெறுப்பார்களே."

"இல்லவே இல்லை. ஒவ்வொருவரும் நாலைந்துதரம் வீட்டிற்கு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறார்கள். வராமலிருந்து விடுவேன் என்று பயந்து வட்டிப் பணம் கூட உடனே கொடுப்பதில்லை"

---

முதல் நண்பன், "பணப்பையை வீட்டில் மறந்து வைத்து விட்டேன். ஒரு ரூபாய் கடன் கொடு"

இரண்டாவது நண்பன், "இந்தா, ஐந்து ரூபாய் நோட்டாக விருக்கிறது. நாளை கொடு. இவ்வளவு அஜாக்ரதையாக விருக்கலாமா? பணப்பையை யாராவது எடுத்துக் கொண்டு விட்டால் என்ன செய்வாய்?"

முதல் நண்பன் (ஐந்து ரூபாய் நோட்டை மடித்து ஜோபியில்போட்டுக்கொண்டு,) "பாதகமில்லை. அதில் ஒரு அணாதானிருக்கிறது."

---

பக்கத்து வீட்டு சிறிய பெண் "அம்மா கொஞ்சம் அரிசி கடன் வாங்கிக்கொண்டு வரச் சொன்னாள்."

சேஷி (கடன் கொடுக்கமனமில்லாமல்) "அரிசி யில்லை. இருந்த அரிசியை சமைத்தாகி விட்டது."

சிறிது நேரம் கழித்துப் பக்கத்து வீட்டுப்பெண் திரும்பி வந்து "அம்மா கொஞ்சம் சாதம் கடன் வாங்கி வரச் சொன்னார்" என்றாள்.

---

மானேஜர் "முதலில் ஒரு குமாஸ்தா வேலை கொடுக்கிறேன். வேலைத் திறத்தைப் பார்த்துப்பிறகு உனக்கு சம்பளம் கொடுக்கிறேன்."

வேலைக்கு வந்த யௌவனப் பிராயமுள்ள மனிதன் "அது சரி. என் திறமைக்கு ஏற்ற சம்பளம் உங்கள் கம்பனியால் கொடுக்க முடியுமென்பதில் ஒன்றும் சந்தேகமில்லையே."

---

குமாஸ்தா (முதல் நாள் இரவில் பலமாக மதுபானம் செய்துவிட்டு) "உடம்பு சரியில்லை. இன்று ஆபீஸிற்கு வரமுடியாதென்று எஜமானனுக்கு டெலிபோன் செய்து விட்டேன். அவர் ஒன்றும் தப்பாக அபிப்பிராயம் கொள்ள மாட்டாரே."

நண்பன் "தப்பபிப்ராயம் கொள்ள இடமுண்டு. இன்று ஞாயிற்றுகிழமை யாகையால் விடுமுறை தினமாகும்."

நமது சிறு கதை.

# கிழவனின் தந்திரம்

—:—

(ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி அம்மாள் எழுதியது.)

சென்னைமா நகர் பைகிராப்ட்ஸ் ரோடில் ஓர் பழமையான வீட்டில் ஒருகிழவன் வசித்து வந்தான். அவனுடன் அவன
ருமை பௌத்திரி தாராபாயும், ஓர்வேலைக்காரியும் இருந்தனர். கிழவன் வீட்டில் எங்கு பார்த்தாலும் புராதனமான ஸாமான்கள் நிறைந்திருந்தன. ஒவ்வொன்றும் அதிக மதிப்புள்ளதாயும் அபூர்வமாயு மிருந்தன. அவன் மூர்மார்க்கெட்டில் 30, 40 வருஷமாய் ஓர் பெரிய கடை வைத்திருந்தான். அதனால் அவனுக்கு ஏராளமான லாபம் வருஷா வருஷம் கிடைத்து வந்து சுமார் முப்பதினாயிரம் ரூபாய் வரையில் சம்பாதித்து விட்டான். சமீப காலத்தில் அதே தெருவிலிருந்த நடேசன் என்பவன் அவனுக்குப் போட்டியாய் பழய சாமான்கள் வாங்கி அவனுக்கு எதிரில் மூர்மார்க்கெட்டில் கடைவைத்து, கிழவன் கடைக்கு வரும் வாடிக்கைக்காரர்களைக் கலைத்து, தன்னிடம் வியாபாரம் செய்யும்படிச்செய்து, கிழவனுக்கு நஷ்டத்தை உண்டுபண்ணி வந்தான்.

கிழவனுக்கு அவன் பேத்தியைத் தவிர வேறு சுற்றத்தார் கிடையாது. ஆனால் ஓர் பெரிய வக்கீலான கோகுலர் அவன் ஆப்த நண்பனாயிருந்தார். கிழவனுக்கு இப்பொழுது வயது 80 ஆகி ஒருவருஷ காலமாய்க் காசநோயால் பீடிக்கப்பட்டு வந்தான். டாக்டர் அவன் இனி 2, 3 மாதத்திற்கு மேல் உயிருடனிருக்க மாட்டானென்று சொல்லிவிட்டார். கிழவனுக்குத் தனக்குப் பிற்காலம் தன் ஆஸ்தியை எப்படி பேத்திக்குச் சௌகரியமான நிலையில் வைப்பதென்பதைப் பற்றி கவலைஏற்பட்டது.

அந்தச் சமயம் பெரம்பூரில் மிகவும் அபூர்வமான கெடியாரம் ஏலம் போவதாகத் தெரிந்துகொண்டு, அதை 50 ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கி வந்தான். அதை வாங்கினவுடன் கிழவனுக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. கிழவனுக்கு எல்லாத் தொழிலும் தெரியுமாதலால், அதைத் தானே ரிபேர்செய்து கூடத்தில் மாட்டி வைத்தான். ஒரு வாரத்திற்குள் அதைப் போலவும் அதைவிடக்கொஞ்சம் சிறிதான இரண்டு கெடியாரங்கள் வாங்கினான். பிறகு தன் நண்பரான வக்கீலை அழைத்து ஓர் உயில் தயார்செய்து அதில் தனது ஸொத்துக்களுக்குத் தன் பேத்தியே வார்ஸாகவும், வக்கீல் கோகுலரை அவள் மேஜராகும்வரையில் அவளுக்கு கார்டியனாகவும் நியமித்தான். அந்த உயிலை வக்கீலிடமே கொடுத்துவிட்டு, ஒருவருக்கும்தெரியாமல் ரகஸியமாய்ச் சில ஏற்பாடுகள் செய்தான்.

பிறகு, தாராபாயை அழைத்து! "தாரா! என் கண்ணே! டாக்டர் இன்னும் 2 மாதம் தான் எனக்குக்கெடுவைத்திருக்கிறார். அதற்காக நீ வருந்தாதே. என் நண்பர் உன்னைப் பாதுகாப்பார். நான் உன் நன்மைக்காகச் சில ஏற்பாடுகள் சொல்லுகிறேன். அதின்படியே எள்ளளவும் தவறாமல் நடக்கிறாயா?" என்று வாஞ்சையுடன் வினவினான். தாராபாய்



மதுரை சிவாஜி சாரணர்களும் ஜில்லா சாரணர் கமிஷனர் ராவ் சாகிப் ஆர். கிருஷ்ண அய்யரும். K.TV..

அழுதுகொண்டே, "தாதா! இவ்வுலகத்தில் எனக்குள்ள ஒரே பந்துவான உம்மைப் பிரிந்து எப்படி உயிர்தரிப்பேன்? என்பேரில் அபரிமிதமான அன்பைச் செலுத்தி என்னை வளர்த்துவரும் தங்கள் வார்த்தையையும் தட்டி நான் நடப்பேனா? சொல்லுங்கள்", என்றாள்.

கிழவன்:—"தாரா! நான் இறந்த 13-ம்நாள், நான் சமீபத்தில் வாங்கிய இரண்டு கெடியாரங்கள், மற்ற நம் வீட்டிலும் கடையிலுமுள்ள பழய சாமான்கள் எல்லாவற்றையும் ஏலம் போட்டு வந்த விலைக்கு விற்றுவிடு. அதிகமாய் விளம்பரமும் செய்ய வேண்டாம். ஆனால் நான் ஒரு வாரத்திற்குமுன் வாங்கிய பெரிய கெடியாரத்தை மாத்திரம் என்ன விலை கேட்டாலும் விற்காதே! மற்ற இரண்டு கடியாரத்தையும் என்ன விலை வந்தாலும்விற்றுவிடு. இரண்டு கெடியாரத்தையும் ஒருவருக்கே என்னவானாலும் விற்காதே. ஏலத்தன்று காலை, ஏலமென்று ராயப்பேட்டை முழுவதும் தமுக்கடிக்கச்சொல்லு. வேறு ஒரு விளம்பரமும் செய்ய வேண்டாம். இந்த சாமான்கள் ஏலம் போட்ட தினமே, அடுத்த வாரம் இந்த நாமிருக்கும் வீடு ஏலம் போடப்படுமென்று விளம்பரப்படுத்திவிடு. அதிலிருந்து 7-ம் நாள் கட்டாயம் இந்த வீட்டை ஏலம் போட்டுவிடு. வீடு ஏலத்தைப்பற்றி 4, 5 நாள் முன்னிருந்து பேபர்களில் நன்றாய் விளம்பரம் செய்து, துண்டுப் பிரசுரங்கள் அச்சடித்துப் பட்டினம் முழுவதும் கொடுக்கும்படிச் செய். நான்சொல்லியபடிஎள்ளளவும் தவறாமல் நடக்கிறேனென்று உறுதி செய்" என்றான். தாராவும் அப்படியே செய்வதாக உறுதிமொழி செய்தாள். மறுநாள் கிழவர் காலகதியடைந்துவிட்டார். கிழவரின் சடங்குகள் விமரிசையாய் நடந்தன.

அவரிறந்த 13-ம் நாள் காலை திடீரென்று அவர் சாமான்கள் எல்லாம் அன்று மத்தியானம் 12-மணிக்கு ஏலம் போடப்படுமென்று தமுக்கடிக்கப்பட்டதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். அவர்களுக்குப் பக்கத்துவீட்டானும், கிழவருக்குப் போட்டியாய் மூர்மார்க்கெட்டில் வியாபாரம் செய்து வந்தவனுமான நடேசன், சாமான்கள் ஏலத்துக்கு அதிக விளம்பரமில்லாததால் அதிகக் கூட்டம் வராதென்று போட்டியில்லாமல் மலிவாய்க் கிழவருடைய சாமான்களைத் தான் வாங்க அதிகலாபமடையலாமென்று ரொம்ப சந்தோஷமடைந்தான்.

ஏலம் 12-மணிக்குத் தொடங்கிற்று. சமீபத்தில் வசிக்கும் ஜனங்கள் வந்திருந்தனர். அனேகபழய சாமான்களையும், கெடியாரத்தில் ஒன்றையும் நடேசனே மலிவாய் வாங்கினான். மற்றொரு கெடியாரம் ஏலத்திற்குவந்தபோது, நடேசன் ஏலம்கேட்க, ஏலம் கூறுகிறவன் ஒரு கெடியாரத்திற்கு மேல் ஒருவருக்குக் கொடுக்கப்பட மாட்டாது என்று ஆக்ஷேபித்ததினால், வேறொரு கனவானுக்கு அந்தக் கெடியாரம் 40 ரூபாய்க்கு ஏலம்விடப்பட்டது. அன்று சாயந்திரத்திற்குள் எல்லாச் சாமான்களும் ஏலத்தில் விற்கப்பட்டன. தாராவுக்குத்தன்வீட்டுச்சாமான்கள் எல்லாம் ஏலம் போடப்பட்டதைப்பற்றிச் சற்று வருத்தமாயிருந்தாலும், பாட்டனார் சொல்படித் தான் நடந்ததாக வேண்டுமென்று சமாதானமடைந்தாள்.

அன்றையதினம் முதல், ஒவ்வொரு தினசரிப்பத்திரிகையிலும் தன் வீடு ஏலம் போடப்படுமென்று விளம்பரப்படுத்திவிட்டாள். ஒவ்வொரு தெருவிலும் துண்டுப்பத்திரிகைகள் பறந்தன. ஏல நேரத்திற்கு 2 மணிக்கு முன் ஜனங்கள் அங்கு வந்து கூடினர். ஏல மாரம்பிக்கும்சமயம் தெரு முழுவதும் ஒரே தலையாகவே காணப்பட்டது. வீடு சுமார் 4000 ரூபாய் வரையிலும் வெகு சீக்கிரம் உயர்ந்துவிட்டது. அதிலிருந்து 6000 வரையிலும் மூன்று அல்லது நான்கு பேர் கேட்டார்கள். அதற்குமேல் நடேசனும், வேறொரு கனவானும் மாத்திரம் போட்டி போட்டார்கள். '14000 ரூபாய் என் கேழ்வை' என்றான் நடேசன். பிறகு தன்னுடன் இப்படிப் போட்டிப்போடும் மனிதன் யாரென்று ரொம்ப கோபத்துடன் நடேசன் பார்க்க, அவர் அன்று இன்னொருகெடியாரம்வாங்கின கனவானாயிருந்தார். இவன் பார்த்த பார்வையிலிருந்து பயந்தோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலேயோ அவர்அதற்குமேல் ஏலம்கேட்கவேயில்லை. கடைசியில் வீட்டை 14,000த்திற்கே நடேசன் வாங்கி, அன்றே நாலில் ஒரு பங்கு கிரயத் தொகையையும் செலுத்திவிட்டான். மூவாயிரம் அல்லது நாலாயிரத்திற்கு மேல் பெறுமானமில்லாத ஒரு வீட்டிற்கு ரூ14,000 கொடுத்து ஒருவன் வாங்கினதைப்பார்த்து ஜனங்கள் வியப்படைந்தனர். ஒரு சமயம் அதில் புதையல் ஏதாவதிருக்குமோ, அது இவனுக்குத்தெரிந்திருக்குமோ என்று பேசிக்கொண்டனர். அது முதல் ஒரு வாரத்திற்குள் நடேசன் தன் வீடு முதலியவைகளைப்பாங்கில் அடமானம் வைத்துப் பாக்கித்தொகையையும் செலுத்தி வீட்டுக்கிரயப் பத்திரத்தைப் பூர்த்தி செய்துகொண்டான்.

வீடு ஏலம் போன பிறகு தாராபாய் தன் சாமான்களுடன் கோகுலர் வீட்டிற்கே வந்து விட்டாள். அதற்கு ஒரு வாரத்திற்குப் பிறகு கோகுலர் தனது ஆபீசறையில் உட்கார்ந்திருந்தார்.

(22-ம்பக்கம் பார்க்க)




## நவ நாகரீகக் குறிப்புகள்.

(காசினி எழுதியது.)

### காசிப் பட்டுகள்.

* * * நீ கேட்டிருக்கும் மாதிரிப் புடவைகளுக்கு பெனாரிஸ் (காசிப்) பட்டுப் புடவைகள் என்று பெயர். இவைகள் சாதா உடல் உடையவைகளாகவும், உடலில் சரிகைப் போட்டும் விற்கப் படுகின்றன. கரைகளிலும், தலைப்பிலும் செய்திருக்கும், சரிகை வேலை மிகவும் அழகாக இருக்கிறது. புடவை விலை பட்டின் நயத்திற்கும், சரிகை வேலைப் பாட்டிற்கும் எற்றபடி, எழுபத்தைந்து ரூபாய்களிலிருந்து, நூற்றைம்பது ரூபாய்கள் வரையில் இருக்கின்றது. தற்காலத்தில் இந்தப் புடவைகளைத் தாலி கட்டுவதற்குக் கூரையாக வாங்குகிறார்கள். கூரைப் புடவை சிகப்பு அல்லது ரோஜா வர்ணமாக இருந்தால்தான் மங்களகரம் என்று முன்னாட்களில் எண்ணினார்கள். இப்பொழுது, 'இந்தப் பெண் நல்ல சிகப்பாக இருக்கிறாள்; இவளுக்கு நல்ல நீல நிறத்தில் கூரை வாங்கினால் நன்றாக இருக்கும்', 'இவள் மா நிறமாக இருக்கிறாள், இவளுக்கு ஆரஞ்சு, அல்லது சிலேட் நிறத்தில் புடவை வாங்கினால் அழகாக இருக்கும்', என்று, அவர் அவர்கள் இஷ்டப்படி எல்லாம் கூரை வாங்குகிறார்கள். இது மட்டுமா? கூரைப் புடவையை முதலில் நல்ல நீளமாக வாங்கிவிடுகிறார்கள். தாலி கட்டும் பொழுது ஐங்கார்க் கட்டோ அல்லது கொசுவாக்கட்டோ, அவர் அவர்தம் ஜாதிக் கட்டு கட்டுவதற்குப் பதினெட்டு முழம் வேண்டி இருப்பதால் இப்படி வாங்குகிறார்கள். அப்புறம், 'புடவை அதிக நீளமாக இருக்கிறது; தூக்கிக் கட்ட முடியவில்லை' என்று இரண்டு முழத்தைக் கிழித்து சிறிய குழந்தைகளுக்குப் பாவாடை தைத்தோ இன்னும் வேறு எதற்காவது உபயோகித்தோ விடுகிறார்கள். எல்லாம் இந்த நாட்களில் என் அத்தை சொன்னமாதிரியில் 'மனம் கொண்டது மாளிகை' யாகத்தான் இருக்கிறது. எதற்கும் ஒரு வரம்பரைந்த கட்டுப்பாட்டைக் காணோம்.

### ரிஜிஸ்டர் கலியாணம்.

இப்பொழுதுதான் எல்லாரும் ஒரு ஜாதிக் கட்டுப்பாடில்லாமல் கலியாணம் செய்து கொள்ளத் துவக்கி விட்டார்களே. இதில் பிராமணர்கள், அல்லது பிராமணர் அல்லாதவர்களாக இருந்தாலும் கூட, உள்பிரிவினைகள் எத்தனையோ இருப்பதால், கலியாணங்கள் ஒரு வேளை நியாயப்படிச் செல்லாமல் போய்விடுமோ என்ற பயம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது, ஒரு ஐயரும் ஒரு ராவ்ஜியும் மணந்து கொள்ளும்பொழுது, இரு தாரத்தாரும் பிராமணர்களாக இருந்த பொழுதிலும், உட்பிரிவு வேறுதலால் கலியாணம் சட்டப்படிச் சரியானதில்லை என்று ஒரு வேளை கூறிவிடுவார்களோ என்று சிலர் பயப்படுகிறார்கள். பிரா



ஸ்திரீ சாரணர் கமிஷனர் மிஸஸ் ஈ. ஜாக்ஸனும் வேலூர் கவர்ன்மெண்ட் பெண்பாடசாலை சாரணர்களும். D K.R

மணர்கள் அல்லாதவர்களுக்குள்ளும் இப்படியே எத்தனையோ பிரிவினைகள் இருப்பது எல்லாருக்கும் தெரிந்தது தானே. இவ்வாறு கலியாணம் எங்கு ரத்தாகி விடுமோ என்று பயப்படுகிறவர்கள் இதற்கு ஒரு உபாயம் செய்கிறார்கள். சாஸ்திரப் பிரகாரம் மந்திரத்துடன் சாதாரணக் கலியாணங்களைப் போல் தாலி கட்டிக் கலியாணத்தைச் செய்துவிட்டு, ரிஜிஸ்டர் கலியாணமும் செய்து வைக்கிறார்கள். சிலர் ரிஜிஸ்டர் கலியாணம் மட்டும் செய்து கொள்ளுகிறார்கள்: பிறகு டீபார்ட்டி கொடுத்துவிடுகிறார்கள். சிலருக்கு இத்தையும்விட மனது வருகிறதில்லை. ரிஜிஸ்டர் கலியாணமும் அவசியம்! என்று தோன்றுகிறது. இரண்டையும் செய்து கொள்ளுகிறார்கள். ரிஜிஸ்டர் செய்யும் உத்தியோகஸ்தரை வீட்டில் வரவழைத்து ரிஜிஸ்டர் கலியாணத்தை வேண்டுமானால்செய்து கொள்ளலாம்; இல்லாவிட்டால் ரிஜிஸ்டரார் ஆபீஸுக்குப் போயும் செய்து கொள்ளலாம். இது அதிக நேரம் ஆவதில்லை. மணப் பெண்ணும், பிள்ளையும் தாங்கள் ஒருவரை ஒருவர் கலியாணம் செய்து கொள்ளுவதற்கு யாதொரு தடையும் இல்லை என்று சொல்லிப் பிறகு தாங்கள் ஒருவரை ஒருவர் மணப்பதாகக்கூறி, இதற்கென்று ஏற்கனவே தயாரிக்கப் பட்டிருக்கும் பத்திரங்களில் கையொப்பம் இடுவார்கள். இதற்கு சாட்சியாக இன்னும் மூவர் கையொப்பம் இடுவார்கள். ரிஜிஸ்டர் பணத்தைக் கட்டி விடுவார்கள்; இவ்வளவு தான். இது இவ்வளவு சுலபமாக இருக்க ஓமத்தை வளர்த்து, புகை கண்ணை அவிக்க ஒரு நாழிகை சிரமப்படுவானேன் என்று சிலர் எண்ணலாம். பழையவழக்கங்களை அதுவும் அவைகள் சாஸ்திரோக்தமானவை என்பதைப் புறக்கணித்தல் அவ்வளவு சுலபமில்லை. தற்காலத்தில் இரண்டையும் கலந்து ஒரு மிஸ்ரம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

### நூதன நலுங்கு.

பழைய வழக்கங்கள் என்றதும் அன்று என்னுடைய அத்திம்பியார் சொன்ன கதை நினைவுக்குவருகிறது. அவர் அது வாஸ்தவமாக நடந்ததாகச் சொன்னார். ஒன்றிரண்டு தலைமுறைகளுக்கு முன் ஏதோ காரணங்களால் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்துவிட்ட இரண்டு குடும்பத்தாருக்குள் ஒரு கலியாணம் நடந்ததாம். அவர்கள் முதலில் மாதா கோயிலில் கிறிஸ்துவ முறைப்படி மணத்தை நடத்திவிட்டுப் பிறகு ஒரு சிறிய தாலியையும் கட்டினார்களாம். மாதாகோயிலுக்கு அருகாமையில் இருந்த ஒரு சத்திரத்தில் சாப்பாட்டிற்கு ஏற்பாடுசெய்திருந்தார்களாம். கலியாணம் முடிந்து கோயிலில்இருந்துசத்திரத்திருக் வந்ததும் சிலர் நலுங்கு வைத்தால் நன்றாக இருக்கும் என்று அபிப்பிராயப்பட்டார்களாம். உடனேயே ஒரு மேளக்காரனைத் தருவித்து நலுங்கு வைத்தார்களாம். ஓச்சன், 'இது நியாயமா, ஸ்ரீராம சந்திரா!' என்ற பாட்டை வாசித்தானாம். எல்லாம் நடுவாந்தரக் காலமாக இருக்கிறது. பழைய வழக்கங்களை முழுக்க விட்டபாடும் இல்லை. புதியவைகளை அடியுடன் கைப்பற்றின பாடும் இல்லை. இரண்டையும் கலப்பது சில வேளைகளில் சிரிப்புக்கு இடமாக முடிகிறது.

# ராஜா ரணமல்

## ராணா போகுல்ஜியின் கொலைக்குப் பழிவாங்கியது

(ஸ்ரீமான் என். கே. அய்யர் எழுதியது.)

மேவாட் தேசத்தின் அதிபதி ராணா மோகுல்ஜீயை அவரது சிற்றப்பன் முறையானவர்களாகிய சச்சா, மைரா என்ற இருவரும், கொலை செய்து விட்டுச் சித்தூரில் வந்து, சச்சா என்பவன் ராணாபட்டத்துடன் முடிசூட்டிக் கொண்டதும், அதன் காரணமாக ராணாமோகுல்ஜியின் தாய் மாமனாகிய மார்வாட் தேசத்தின் அதிபதி ராஜாரணமல் என்பவர், அக்கொலையாளர் இருவரையும் கொன்று, ராணா மோகுல்ஜியின் கொலைக்குப் பழி வாங்கும் வரை, தன் தலையில் தலைப்பாகையணிவதில்லை யென்று சபதஞ்செய்திருந்ததாகவும் முன் வாரத்துப் பகுதியில் கூறினோம்.

ராணா மோகுல்ஜி கொலையுண்டபின், அவர் மகன் கும்பன் என்னும் இளவரசன் தன்னுயிருக்குப் பயந்து ஒடியொளித்துக் கொண்டதாகவும் முன் கூறியிருக்கின்றோம். மேவாட் தேசத்து அதிபதிகளுக்கு மாத்திரமே ராணா யென்ற பெயர் வழங்கி வந்தது. மார்வாட் தேசத்து அரசர்கள், ராஜா என்ற பட்டத்திற்கு மாத்திரமே உரிமையுடையவர்கள். இன்னும், மேவாட் தேசத்தில் ஆண்ட ராஜபுத்திரர்கள் சிசோதியா என்னும் பெயர் பெற்ற வம்சத்தைச் சேர்ந்தவர்கள். மார்வாட் தேசத்து மன்னர்கள் ராட்டோர் என்னும் ராஜபுத்திர வம்சத்தைச் சேர்ந்தவர்கள். இவ்விஷயங்களை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும். மேவாட் தேசத்தின் ராஜதானி சித்தூர் என்னும் நகரம்.

ராஜா ரணமல்,தான் செய்த பிரதிக்கினையை நிறைவேற்றப் பல விதத்திலும் பாடுபட்டு வந்தார். அவர், தனது ராட்டோர் வம்சத்தவர்களாகிய ராஜபுத்திரப்படைகளை ஏராளமாகத் திரட்டி, அக்கம் பக்கங்களிலிருந்த அநேக சிற்றரசர்களையும் தன் உதவிக்காகச் சேர்த்துக்கொண்டு, சித்தூரை நோக்கிப் புறப்பட்டார். சித்தூரிலும், அவர் உதவிக்காக அநேக சிசோதிய வீரர்கள் முன்வந்தார்கள்.ஏனெனில் தாய்வழியில் தச்சர் குலத்தைச் சேர்ந்த சச்சா, தம்மீது அரசாள்வது, அவர்களில் அநேகருக்குப் பிடிக்க வில்லை. இவ்வாறு, பெருத்த சைனியங்களுடன் ராஜா ரணமல் சச்சாவையெதிர்க்கவும், அவன் படைகள், இவர்கள் முன் நிற்க முடியாமல், புறங்காட்டியோடின. சச்சாவும், அவன் இளைய சகோதரன் மைராவும், தத்தம் குடும்பங்களுடன் உயிர்தப்பி, மேவாட் தேசத்தின் எல்லைப்புறத்திலிருந்த பாய் பர்வதத்திலேறி, அங்கிருந்த ஓர் பழைய கோட்டைக்குள் புகுந்துகொண்டார்கள். இங்கு ராஜா ரணமல் சித்தூரில் வெற்றியடைந்ததும், ராணா மோகுல்ஜியின் குமாரன் கும்பன் இளவரசனைச் சிங்காசனத்திலேற்றி விட்டு, சச்சா, மைரா இவ்விருவரையும் துரத்திச் சென்றார்.

பாய் பர்வதம் மிகவும் செங்குத்தானது. அதல்லாமலும், அதன் மீதிருந்த பழங் கோட்டையை சச்சாவும், மைராவும் நன்றாகச் செப்பனிட்டு, சத்துருக்கள் எளிதில் ஏறக்கூடாத வண்ணம் செய்து வைத்திருந்தார்கள். அப் பர்வதத்தின் அடிவாரங்களில் பீல் என்னும் மலைச்சாதியார் வசித்துவந்தார்கள். அவர்களது தலைவனை முன் ஒரு சமயத்தில் ராஜா ரணமல் விரோதத்தின் மீது கொலை செய்திருந்ததால், இப்போது அவர்கள், ரணமல்லுக்கு எதிரிடையாயிருந்தார்கள். ஆனால் அவர்களது உதவியின்றி, ராஜா ரணமல் எவ்விதத்திலும் அப் பர்வதத்தின் மீது ஏறுவதற்கு வழியில்லாமலிருந்தது. இச் சந்தர்ப்பத்தில் அவர் ஓர் தந்திரத்தைக் கையாளத் தீர்மானித்தார்.

அவர், முன் கொலை செய்த பீல் சாதித் தலைவரது புத்திரர்கள் வீட்டிலில்லாத சமயம் பார்த்து, ஓர் நாளிரவில் அவர் அவ் வீட்டிற்குள் நுழைந்து, அத் தலைவனது மனைவியை நமஸ்கரித்து, தான்செய்த குற்றத்துக்காக மன்னிக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அவ்வம்மையும், அவ்வாறேதன்னிடம்அடைக்கலம் புகுந்த சத்துருவின் மீது இன்னும் கோபங் காட்டுவது நியாயமில்லையென்று கருதி, அவரையுபசரித்து, அவர் வந்த விஷயத்தைப்பற்றிவினவினாள். ராஜா ரணமல், தான் செய்திருக்கும் சபதத்தைப் பற்றி, அவ்வம்மையிடம் விஸ்தாரமாக எடுத்துக் கூறினார். அப்போது அவள் குமாரர்கள் வருந் தருணமாயிருந்ததால், அவ்வம்மை, ராஜா ரணமல்லை ஓர் அறைக்குள் ஒளித்து வைத்துவிட்டு, தன் குமாரர்களைப் பிரியத்துடன் வரவேற்று அவர்களுக்கு அன்னம் வடிக்கத் தொடங்கினாள். அவர்கள் போசன மருந்தும்போது, அவ்வம்மை அவர்களை நோக்கி, அவர்களது ஜன்ம சத்துருவாகிய ராஜா ரணமல் அப்போது அவர்கள் வீட்டைத் தேடி வரும் பட்சத்தில் என்ன செய்வார்களென்று வினவினாள். அதற்கு இளையகுமாரன் தான் உடனே ராஜா ரணமல்லைக் கொன்றுவிடுவதாகப் பதில் கூறினான். ஆனால் மூத்த குமாரன் அவ்வாறு அபிப்பிராயப்படவில்லை. அவன் சொன்னதாவது :— ராஜா ரணமல் அவர்களது தகப்பனைக் கொன்ற சத்துருவாயிருந்த போதிலும், அவர் தம் வீட்டைத் தேடி வருவாராகில், தான் அவரை மிகவும் மரியாதையுடன் உபசரிப்பதாகக் கூறினான். இவ் வார்த்தைகளைக் கேட்ட தாய் அவனது பெருந்தன்மையை மெச்சிப் பேசி விட்டு, ராஜா ரணமல்லை, அவர் ஒளிந்திருந்த அறையிலிருந்து அழைத்து வந்து, தன் குமாரர்கள் முன் நிறுத்தினாள். அப்போது ராஜா ரணமல், அவர்களிடமும் தனது பழைய குற்றத்திற்காக மன்னிப்புக்கேட்டுவிட்டு, தான் செய்திருக்கும் பிரதிக்கினையின்படி சச்சாவையும், அவன் தம்பி மைராவையும் கொல்லும்பொருட்டு, அவர்களது உதவியை நாடுவதாகச் சொன்னார். பீல் தலைவனது மக்களிருவரும் ராஜா ரணமல்லுக்கு உதவி புரிவதாக வாக்களித்தார்கள். இவ்வாறு ராஜா ரணமல், தன் சத்துருக்களையும் துணைவராக்கிக் கொண்டார்.

இப்போது பர்வதத்தின் மீதேறிச் சச்சாவையெதிர்ப்பதே பாக்கியாக நின்றது. ஆனால் அவர்கள் ஏறிப்போக வேண்டிய குறுக்குப் பாதையின் மத்தியில், ஒரு பெண் சிங்கம் குட்டி போட்டிருப்பதாக வறிந்து, பீல் தலைவர்கள் சில தினங்கள் காத்திருந்து பிறகு புறப்படலாமென்று சொன்னார்கள். ராஜா ரணமல் அதற்கிணங்கவில்லை. அவர்கள் பர்வதத்தின் மீது, ஒற்றடிப் பாதைகள் வழியாக சப்தமில்லாமல் போகவேண்டியிருந்ததினால், வழியில் சிங்கத்தை யெதிர்க்க நேரிடும்போது, அதன் கர்ச்சனையால் மலைக்கோட்டையிலுள்ள சத்துருக்கள் விழித்துக் கொண்டு முன்சாக்கிரதையாகக் கூடும் என்ற எண்ணத்தாலேயே பீல் தலைவர்கள் சில தினங்கள் பொறுக்கும்படிச் சொன்னார்கள். ஆனால் ராஜா ரணமல் அந்த யோசனைக்கிணங்காமல், உடனே புறப்படவேண்டுமென்று வற்புறுத்தியதினால் பீல் தலைவர்கள், தம்மாட்களுடன் புறப்பட்டு விட்டார்கள். ரணமல்லும் தன் படைகளிலிருந்து பொறுக்கி யெடுத்த ஆயிரம் ராட்டோர் வீரர்களுடன் புறப்பட, இவ்விரு கட்சியாரும், அச்செங்குத்தான பர்வதத்தின் மீதுள்ள ஒற்றடிப் பாதைகளின் வழியாக, சத்தமில்லாமல் மெல்ல மெல்லச் சென்றார்கள். அவர்கள் எதிர்ப் பார்த்த வண்ணமே போகும் வழியில் பெண் சிங்கம் சந்தித்து உரத்த கர்ச்சனையிட்டது, அதை ராஜா ரணமல்லின் மகன்எதிர்த்துக் கொன்று விட்டான். அதன் பிறகு, அவர்கள் செல்லும் வழி மிகவும் செங்குத்தாயிருந்தது. ஒவ்வொருவராக, ஒருவர் கையை மற்றொருவர் பிடித்துக் கொண்டு மிகவும் சாக்கிரதையாக நடந்தார்கள்.

மலையின் உச்சியையடைந்ததும், அவ்வீரர்கள் கோட்டையின் மதிலின்மீது ஏறினார்கள். ஆயுதபாணிகளான அத்தனை வீரர்கள் ஏறுவதலுண்டான சப்தத்தால், கோட்டைக்குள் படுத்துறங்கிக் கொண்டிருந்த சச்சாவின் குமாரத்தி விழித்துக் கொண்டு, தகப்பனைக் கூப்பிட்டு, அதைப் பற்றித் தெரிவித்தாள். ஆனால் சச்சா எவ்விதச் சந்தேகமும் இல்லாதவனாகி, தன் மகள் கேட்ட சப்தம் ஒருக்கால் ஆகாயத்தில் இடியின் சப்தமாயிருக்கலாமென்று சொல்லிவிட்டுத் திரும்பவும் படுத்துக் கொண்டான். சிறிது நேரத்திற்குள் ஆயிரம் வீரர்கள் கோட்டை மதிலிலிருந்து, திடீர்திடீரென்று உள்பக்கத்தில் குதிக்கும் சப்தம் உண்டாயிற்று. அதைக் கேட்டதும், கோட்டையிலிருந்தவர்கள் எல்லோரும் விழித்துக் கொண்டார்கள். சச்சாவும், அவன் தம்பி, மைராவும் அவர்களைச் சேர்ந்த ஆட்களும் தத்தம் ஆயுதங்களைத் தரித்து, கோட்டையை சத்ருக்களிடமிருந்து காப்பாற்ற முடியாமற் போயினும், தம்முயிரைத் தப்புவித்து ஓடிப்போக முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால் ராஜாரணமல்லின் ஆட்கள் நாலாபக்கங்களிலும் சூழ்ந்து கொண்ட படியால், எவராலும் உயிர்தப்பி ஓட இயலவில்லை. சச்சாவின் முக்கிய மந்திரியாயிருந்த ஒருவன் மாத்திரம் பெண்ணுடை தரித்து, எப்படியோ ஓடிவிட்டான். செபிஹான் வம்சத்தைச்சேர்ந்த ஸுஜாவென்னும் வீரன் சச்சாவை யெதிர்த்துக் கொன்றான். ராஜா ரணமல் குமாரன் ஆர்த்தக்மல், மைராவையெதிர்த்துக் கொன்று விட்டான். அவர்களைச் சேர்ந்த ஆட்களும், அநேகமாக எல்லோரும் கொலையுண்டிறந்தார்கள். இவ்வாறு, தம்மரசனைக் கொன்ற பாதகர்களான சச்சா, மைரா இவ்விருவரும் தம்பாதகத்தின் கூலியைப்பெற்று மடிந்தார்கள். ராஜாரணமல் செய்த பிரதிக்னையும் நிறைவேறியது. இதன்பின் சச்சாவின் குமாரத்தியை ராஜா ரணமல் மணந்து கொண்டு, சித்தூரை நோக்கித்திரும்பினார்.



# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்.

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.எ.பி.எல். எழுதியது.]

இதில் நான் தவறுவேனாயின், நாடகம் அதோகதியாய்விடுமே என்று மிகவும் பயந்தவனாய், அந்தக் காட்சியில் நான் மேடைக்குப் போகுமுன், அது வரையில் நான் உட்கொண்ட மாத்திரைகள் தவிர மிகுதியாயிருந்த மாத்திரைகள் அவ்வளவையும், வாயில் போட்டுக்கொண்டு நெறநெற வெனக் கடித்து விழுங்கிவிட்டு, அக்காட்சியில் சங்கிலிகளால் கட்டப்பட்டவனாய், மேடையின் மீது குதித்து, நான் ஆக்டு சரியாக பண்ண வேண்டும் என்கிற ஒரு எண்ணம் தவிர, வேறொன்றையும் கவனியாதவனாய், என் முழு பலத்தைக்கொண்டு உரக்கப் பேச ஆரம்பித்தேன். இந்தக் காட்சியில் இவன் குரல் எப்படியாகுமோவென்று சந்தேகப்பட்டுக்கொண்டிருந்த எனது நண்பர்கள் எல்லாம், சம்பந்தத்திற்கு பழைய குரல் வந்துவிட்டது! என்று சந்தோஷப்பட்டவர்களாய், கரகோஷம் செய்தனர். நான் ஆக்டு செய்தது நன்றாயிருந்ததென, வந்திருந்த ஜனங்களும் அங்ஙனமே செய்தனர் என்று நினைக்கிறேன். சாதாரணமாக நான் மேடையில் நடிக்கும் பொழுது வந்திருக்கும் ஜனங்கள் அதை நன்றாயிருக்கிறதென ஆமோதிக்கிறார்களா இல்லையா என்பதை நான் கவனிப்பதேயில்லை. ஆயினும் அன்று நான் அதை மிகவும் கவனித்தேன் என்றே சொல்லவேண்டும். சபையோர்களது கரகோஷமானது எனக்கு உற்சாகத்தைத் தந்தது. நான் புசித்தமாத்திரைகளின் பலன் பாதி, சபையோரின் உற்சாகம் பாதி என்னை அக்கஷ்டமான காட்சியை நன்றாக நடித்து முடிக்கும்படியாக உறுந்தியதென நான் கூறவேண்டும். இந்தஇரும்புச் சங்கிலிக்காட்சியின் முடிவில் மனோஹரன் மூர்ச்சையாகிறான் என்று நாடகத்தில் எழுதியுள்ளேன். நான் அன்றிரவு நடித்த பொழுது, வாஸ்தவமாகவே மூர்ச்சையாகினேன் என்றே நான் உரைத்திடல் வேண்டும். அக்காட்சி முடிந்து திரை விழுந்ததும், எனது நண்பராகிய சாரங்கபாணி முதலியாரும் இன்னும் இரண்டு மூன்று ஆக்டர்களும் என்னை அப்படியே தூக்கிக்கொண்டு போய் சோபாவின் மீது வளர்த்தியதாக, எனக்குக்கனவு கண்டது போலிருக்கிறது. இதன் பிறகு நாடகம் முடியும் வரையில் நான் இரண்டு காட்சிகளில் தான்நடிக்க வேண்டியிருந்தது. அக்காட்சிகளில் நான் பேசினவார்த்தைகள் ரங்கத்தின் மீதிருந்தவர்களுக்கே, கேட்டிராது என்று நினைக்கிறேன். முந்திய காட்சியில் நான் பட்ட சிரமத்தினால் என் குரல் அடியோடு அற்றுப்போய் விட்டது! அன்றிரவு இந்நாடகம் முடிந்த பொழுது என் மனதில் தோன்றிய ஓர் எண்ணத்தை இங்கெழுதுகிறேன். எங்கள் சபையில் ஒவ்வொரு நாடக முடிவிலும் "கல்லார்க்கும் கற்றவர்க்கும்" என்னும் ராமலிங்க ஸ்வாமிகளின் திவ்யமான பாட்டொன்றைப்பாடி மங்களம் பாடுவது வழக்கம். இவ்வழக்கம் இது வரையிலும் இடைவிடாது வழங்கி வருகிறது. எங்கள்சபை உலகிலிருக்குமளவும் அப்படியேயிருக்குமெனக் கோருகிறேன். இந்த வழக்கப்படி, மனோஹரன் நாடகம் அன்றிரவு முடிந்த உடன், எல்லா ஆக்டர்களும் வரிசையாக நின்று "கல்லார்க்கும்கற்றவர்க்கும்" எனும் பாட்டைப் பாட ஆரம்பித்தோம். இப்பாட்டை அறிந்தவர்கள் தெய்வவணக்கமான பாட்டுகளுள் இது ஒரு மிகவும் உருக்கமான பாட்டு என்பதை அறிவார்கள். இந்தப்பாட்டை மற்றவர்களுடன் கூடி நான் பாடும் பொழுது தான், அன்று காலை எழுந்தது முதல் அதுவரையில், என்னைப்படைத்த ஈசனை நான் தொழவில்லை என்பது எனக்கு ஞாபகம் வந்தது! எனது பத்தாம் வயது முதல், என் தாயார் ஒரு நாள் எனக்கு உபதேசித்தபடி, குறைந்த பட்சம், போஜனங் கொள்ளுமுன், இரண்டு முறையாவது பகல் இரவில், சுவாமியைத் துதிக்காத நாளில்லை. நோயாயிருக்கும் காலத்தில் கூட பத்தியம் செய்யுமுன் ஈசனைப் பிரார்த்துவிட்டே அதைக் கொள்வது என் வழக்கம். அப்படியிருந்தும் அன்று ஒரு நாள் காலை முதல் அது வரையில் ஈசனை நினைத்தவனன்று! என் தொண்டையிருந்த ஸ்திதியில் நாடகத்தில் எப்படி நடிக்கப்போகிறோமென்று கவலையுற்று, அதைச் சரிப்படுத்துவற்கு விருதாவாக அநேகம் வழிகளைத் தேடினேன், இரண்டு வயித்தியர்களை நாடினேன், அதை வாஸ்தவத்தில் சரிப்படுத்தக்கூடிய ஈசன் இணையடியை நாடமறந்தேன்! இப்பொழுது அதை நினைத்துப்பார்க்கும் பொழுது அன்று நான் பட்டகஷ்டம், நான் செய்த பிழைக்குச் சரியான தண்டனையென்றே தோன்றுகிறது. அன்றுடன் போகாமல், நான் அளவுக்கு மிஞ்சி அதிகமாய் உட்கொண்ட மாத்திரைகளின் குணத்தினால், இரண்டு நாட்கள்வரையில் உடம்பெல்லாம் சூடாகி மிகவும் கஷ்டப்பட்டேன்.



8—2—31 ந்தேதி மியூஸியம் தியேட்டரில், 'ஞான சௌந்தரி' நாடகத்தை நடித்த சென்னை ஸெயின்ட் கேப்ரியல் ஹைஸ்கூல் சாரணர்கள். M.C A.

மறுநாள் காலை எழுந்ததும் என் குரல் சரியாகிவிட்டது! ஈசன் செயலை அறிந்தார் யார்? காலையில், என் பழய வழக்கப்படி ஈசனைத் தொழுதபின், இனி பிராந்தி முதலிய வஸ்துக்களை என் உயிருள்ளளவும் தீண்டுவதில்லை என்று அவர் முன்னிலையில் பிரமாணம் செய்து கொண்டேன். அன்று செய்த பிரமாணத்திலிருந்து இன்றளவும் மனப்பூர்வமாய்த் தவறினவன் அன்று.

மேற்சொன்னபடி அன்று நான் என் தொண்டையைச் சரிப்படுத்துவதற்காக, அரை அவுன்சு பிராந்தியைச் சாப்பிட்டதும் அதனால் அடைந்த பலனையும், இவ்வளவு விவரமாய் நான் எழுதுவதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. இது எனக்கு அவமானத்தைத் தரும்படியான விஷயமே. ஆயினும் எனது நாடகமேடை அனுபவங்களையெல்லாம் ஒன்றும் விடாது உண்மையை வெளியிடவேண்டும் என்னும் அவாவினாலும், மேலும் இதனால் இதை வாசிப்பவர்களுக்கு இது ஒரு சிறிது நற்புத்தியைப் புகட்டும் என்னும் காரணத்தினாலும் இதை வெளியிட்டுள்ளேன். தென் இந்தியாவில் எனக்குத் தெரிந்தவரையில், அநேகம் ஆக்டர்கள், அநேக நூற்றாண்டுகளாக மதுபானம் செய்துவரும் இங்கிலாந்து முதலிய தேசத்துப் பிரபல வயித்தியர்கள் அநேகர் மதுபானம் கூடாதென்றும், அதனால் ஒரு நற்பயனும் கிட்டாது என்றும் போதித்து வந்த போதிலும், நமது தேசத்திலிருக்கும் இந்த ஆக்டர்கள், கொஞ்சம் மதுவை உட்கொண்டால் உடம்பிற்கு நல்லது, முக்கியமாக தொண்டைக்குப் பலன் கொடுத்து, நம்மை நன்றாய்ப் பாடவும் ஆக்டு செய்யவும், உதவும் என்று நம்பி மோசம் போகிறார்கள்.

தொடரும்.

# ஸங்கீதம்.

[காபிரைட்.]

(ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ. எழுதியது.)

பல்லவி.

ஜானகீரமண பக்தபாரிஜாத !
பாஹி, ஸகல லோகசரண !

அனுபல்லவி

கானலோல! கனதமாலநீல !
கருணாலவால ! ஸுகுணசீல !

சரணம்.

ரக்தநளினதளநயன! நிருபால !
ரமணீயானன ! முகுரகபோல !
பக்திஹீனஜனமதகஜஜால !
பஞ்சவதன ! த்யாகராஜ பால !

II

| | |
|---|---|
| ஜானகீரமண | —ஸீதாபதே ! |
| பக்த பாரிஜாத | —பக்தர்களுடைய கோரிக்கைகளைப் பாரிஜாத விருக்ஷத்தைப்போல் நினைத்தவுடன் கொடுக்கிறவனே ! |
| ஸகல லோக சரண | —எல்லா ப்ராணிகளும் சரணமடைகிறவனே ! |
| கானலோல | —ஸங்கீதத்தில் ப்ரியமுள்ளவனே ! |
| கன தமால நீல | —அடர்ந்த பச்சிலைமரத்தைப்போன்ற நீலவர்ணமுடையவனே ! |
| கருணாலவால | —கருணையென்ற மரத்திற்கு பாத்தியைப்போன்றவனே |
| ஸுகுண சீல | —அனந்த கல்யாணகுணங்களை இயற்கையாகவுடையவனே ! |
| ரக்த நளினதளநயன | —செந்தாமரைக் கண்ணனே ! |
| நிருபால | —ஜீவகோடிகளை ரக்ஷிக்கிறவனே ! |
| ரமணீயானன | —அழகுவாய்ந்த திருமுகமண்டலத்தையுடையவனே ! |
| முகுரகபோல | —கண்ணாடியைப்போல் நிர்மலமாய் ப்ரகாசிக்கும் கன்னங்களையுடையவனே ! |
| பக்திஹீன ஜன மதகஜ ஜாலபஞ்சவதன | —பக்தியில்லாத ஜனங்களென்ற மதயானைக்கூட்டங்களுக்கு ஸிம்ஹத்தைப் போன்றவனே ! |
| த்யாகராஜபால | —த்யாகராஜனை ரக்ஷிக்கிறவனே |
| பாஹி | —என்னை ரக்ஷியும் |

**பாரிஜாதம்:**—தைவலோகத்தில் இந்திரனுடைய நந்தனமென்ற தோட்டத்தில் வளரும் மரங்கள், பாரிஜாதம் கல்பம் மந்தாரம் ஹரிசந்தனம் முதலியவை. காமதேனுவென்ற பசுவைப்போல் வேண்டினவர்களின் கோரிக்கைகளை அளிக்குமென்று சொல்லப்படுகிறது.

**ஸகலலோக சரண:**—விபீஷணன் ராமனை வந்து அடைந்தபொழுது வாய்விட்டுச் சொன்ன சரணாகதிமந்த்ரமான "ஸர்வலோக சரண்யாய" வென்றதை ஞாபகப்படுத்திக் கொள்ளவும்.

**கானலோல:**—"வேதங்களில் நானே ஸாம ”மென்று கீதையில் கண்ணன் அருளிச்செய்கிறார். அந்த வேதத்திலிருந்து கானசாஸ்த்ரத்தை ப்ரஹ்மா எடுத்தாரென்பதால் கண்ணன் கானலோலரென்று விளங்கும்.

**தமாலநீல:**—காயாம்பூவையும் நீருண்ட மேகத்தையும் பகவானுடைய திருமேனிக்கு ஒப்பிடுவதுண்டு.

**ஸுகுணசீல:**—மற்றவர்களைப்போல் நற்குணங்களைப் பகவான் ஸம்பாதிக்க வேண்டுவதில்லை. ப்ரஹ்மத்திற்கும் அதின் குணங்களுக்கும் குணகுணீபாவமென்ற ஸம்பந்தமில்லையென்று பெரியோர்கள் கொண்ட ஸித்தாந்தத்தை இங்கே ஞாபகப்படுத்திக்கொள்ளவும்.

**ரக்த நளினதள:**—சாந்தோக்ய உபநிஷத்தில் அந்தராதித்ய வித்யையை வர்ணிக்குமிடத்தில் ஸூர்ய நாராயணமூர்த்தியின் திருக்கண்கள் இப்படி வர்ணிக்கப்படுகின்றன.

**நிருபால:**—அரசர்களுக்குள் ராமனைப்போன்றவர் இல்லையென்று ப்ரஸித்தி. ராமராஜ்யமென்ற பழமொழி இதை விளக்குகிறது. "ராமன் ஆண்ட காலத்தில் லோகமெங்கும் ராமன் ராமனென்று ராமமயமாகவே விளங்கின"சென்ற யுத்த காண்ட வசனத்தை இதற்கு ப்ரமாணமாகக் கொள்ளவும்.

**ரமணீயானன:**—பரதாழ்வானுக்கு ராமனுடைய திருமுக மண்டலத்தை ஸேவிப்பதே பரமானந்தமென்று "லேகனு' வென்ற கீர்த்தனத்தில் சொல்லப்படுகிறது.

**முகுரகபோல:**—பல கீர்த்தனங்களில் "அத்தம்பு செக்கிள்ளு" வென்று ப்ரயோகம் காணப்படுகிறது.

**பக்தி ஹீன ஜன:**—"எலதெலியலேரு" வென்ற கீர்த்தனத்தின் முத்ரைசரணத்தில், ராஜஸஸ்வபாவத்துடன் பகவானைப் பூஜைசெய்யும் அரசர்களான மதயானைகளுக்கு மிருகராஜனைப் (ஸிம்ஹமாய்) விளங்கும் ராமனென்ற ப்ரயோகத்தைப் பார்க்க.

**சுத்தஸீமந்தனீ** — **ஆதி**

[ஸ, ரி (சு), க (ஸா), ம (சு), ப, த (சு), ஸ—ஸ, த, ப, ம, க, ரி, ஸ].

**பல்லவி**

ஜா ன கீ ர ம ண அ அ பக் த பா ரி
கா ரி ஸா த த ஸா ,, ,, ஸ ரி கா ம
ஜா த பா ஹி ஸ க ல லோ க ச ர ண
பா ப மபதப ம க ரி ஸ கதம கா ரி க ம

**அனுபல்லவி**

கா ன லோ ல க ன த மா ல நீ ல
பா ம பா ப ம ப த ஸா ஸ ரிகாரி ரீஸ
க ரு ணா ல வா ல ஸு கு ண சீ ல
ஸ தா பா ப மகா ரிஸ ப ப ம காரி ரீம

**சரணம்**

ரக் த ந ளி ன த ள ந ய ன நிரு பா ல
மா ம ம க ரி க ம ப ப ப ம கமபமகா ரிஸ
ர ம ணீ யா ன ன மு கு ர க போ ல
க ம காரி ஸத ஸ ஸ ஸ ப ப ம பமகாரீ ஸ
பக் தி ஹீ ன ஜ ன ம த க ஜ ஜா ல
பா ம பா ப பம ப த த ஸா ஸ ரிகாரி ரீக
பஞ் ச வ த ன த்யா க ரா ஜ பா ல
சகரி கா ரி ஸ ஸத பா ப கரீ ஸ ஸாரிஸரீ பம

# இயற்கை விநோதங்கள்.

## The Wonders of Nature.

[காபி ரைட்]

(வே. இரா. சு. எழுதியது.)

**மயிர் நரைப்பதேன்?**—நம் தலைமயிரானது கறுப்பாகவும் செம்பட்டை முதலிய வேறு நிறங்களுடனும் இருப்பதற்குக் காரணம் அம்மயிர்களில் வர்ணப் பொருள்கள் தங்கியிருக்கின்றன என்பதே. மயிர் வளரவளர, அவ்வர்ண வஸ்துக்களும் மேன்மேலும் உண்டாக்கப்பட்டு வருகின்றனவாகையால் உரோமமும் எப்பொழுதும் அதன் நிறத்துடனிருப்பது இயலுகிறது. அவ்வர்ணப் பொருள்கள் செய்யப்படுவது எப்பொழுதாவது நின்று விட்டால் மயிரும் வெள்ளையாய் நரைத்து விடும்.

அவ்வர்ணப் பொருள்கள் உண்டாய்க் கொண்டிருப்பதற்கு நம்முடலிலுள்ள எல்லா அங்கங்களும் அததன் வேலையைச் சரிவரச் செய்து கொண்டு வந்து, நாமும் தேக ஆரோக்கியம் குன்றாமலிருப்பது அவசியம். அப்பொழுது நம் தேகத்திலுள்ள நரம்புகள் அவ்வேலைகளைச் சரிவர மேற்பார்வை பார்த்து வரும். நமக்கு வியாதி வந்துற்றதனலாவது, கிழவயதடைந்ததனலாவது நம்முடலிலுள்ள நரம்புகள் தங்களுக்கிட்டிருக்கும் மேற்பார்வைத் தொழிலைச் செவ்வனே செய்யத் தவறினல் இவ்வர்ண வஸ்துக்களும் உண்டாக்கப்படாமற் போகிறது. அதனல் உரோமமும் வெளுத்து நரைக்கிறது.

**நாம ஆழ்ந்து யோசனை செய்யும்போது நம் முகம் என் மாறுதலடைகிறது?**— நம் முகத்திலுண்டாகும் மாறுதல்களுக்கெல்லாம் நம் முகத்தின் மேல் தோலினடியிலுள்ள அநேக சிறு தசைகளே காரணம். நாம் வாயைத் திறந்து மூடுவதும், கண்ணிரப்பைகளைத் திறந்து மூடுவதும் இத்தசைகளின் வேலைகளேயாம். இத்தசைகளை வேண்டியபடி வேலை செய்யச் சொல்லும் உருப்புகள் மூளையிலிருந்து நம் முகத்தின் இரு பக்கங்களிலும், பக்கத்திற் கொன்றாக வோடும் இரண்டு நரம்புகளேயாம். ஆதலால் நம் மூளை என்னென்ன மாறுதல்கள் அடைகிறதோ அம்மாறுதல்களை இவ்விரண்டு நரம்புகளுமடைகின்றன. நாம் ஆழ்ந்து யோசனை செய்து கொண்டிருக்கும்பொழுது, இன்னும் கோபம், துக்கம், சந்தோஷம் முதலியவற்ருல் மனதில் மாறுபாடடைந்திருக்கும் போதும் நம் மூளையின் அமைதி நிலையும் மாறுகிறது. உடனே இவ்விரண்டு நரம்புகளும் முற்கூறியபடி மாறுபாடடைகின்றன. அந்நரம்புகளின் ஏவற்படி நடக்கும் நம் முகத்தின் தசைகளும் இதற்கேற்ப மாறுதலடைகின்றன. அதனல் நம் முகம் மாறுகிறது. துக்கத்திற்சோகத்தினல் வாடுகிறது. சந்தோஷத்தில் மலர்கிறது. கோபத்திற் சீறுகிறது. அம்மாதிரியே நாம் ஆழ்ந்த யோசனையிலிருக்கையில் அதை நம் முகமானது காட்டுகிறது. இஃது "அகத்தினழகு முகத்திற் றெரியும்" என்னும் பழமொழியினலும், "அடுத்தது காட்டும் பளிங்கு போல்—நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" என்னும் குறளினலும் எடுத்துரைக்கப்படும் உண்மைக் கேற்றபடியே யிருக்கிறதல்லவா?

சென்னை கார்ட்பொரேஷன் உத்யோகஸ்தர்கள் சங்கத்தின் ஆதரவின் கீழ் நடந்த 3-வது வருஷாந்த பாட்மின்டன் விளையாட்டுப் போட்டிப் பந்தயத்தில் வெற்றி பெற்றவர்களுக்கு மிஸஸ் கான்ரான் ஸ்மித் பரிசளித்தக் காட்சி. P.P.B.

திருச்சி கட்டிடக் கூட்டுறவு சங்கத்தின் ஆதரவில் நிர்மாணம் செய்யப்பட்ட 'ஸ்ரீனிவாஸ புரத்தை' கலெக்டர் திறந்து வைத்த காட்சி. N.R.S.

**சமுத்திரத்தின் விஸ்தீர்ணம் அதிகரிக்காமல் என் எப்பொழுதும் ஒரே நிலையிலேயே யிருக்கிறது?**—நம்முலகிலுள்ள நதிகளெல்லாம் சமுத்திரத்திலேயே போய் விழுவதாலும், அவ்வாறுகளால் ஓயாமல் சமுத்திரத்தில் தண்ணீரானது கொண்டுபோய் சேர்க்கப்படுவதாலும், சமுத்திரம் நாளுக்குநாள் விஸ்தீர்ணத்திலதிகரிக்கவேண்டியிருக்க என் ஒரே நிலையிலேயேயிருக்கிறதென்னும் கேள்வி தானகவே பிறக்கலாம். ஆனல் நதிகளால் எவ்வளவு ஜலம் சமுத்திரத்தினிடம் கொண்டு சேர்க்கப்படுகிறதோ, அவ்வளவு ஜலம் சூரிய வெப்பத்தினல் நீராவியாக மாறி உயரே கிளம்பிப் போய் மேகத்துடன் வேகமாய்ச் சேர்ந்து விடுகிறதாகையால் சமுத்திரத்தின் விஸ்தீர்ணமும் அதிகரிக்க இடமில்லாமலேயே யிருக்கிறது.

**வைத்தியர்கள் என் நம் நாடியைப் பார்க்கின்றனர்?**—நம்முடலிலுள்ள அவயவங்கள் ஒவ்வொன்றும் அததற்கிட்டிருக்கும் வேலையைச் சரிவரச் செய்வதற்கு அவைகட்குத் தகுந்த ஆகாரம் இருப்பது அவசியம். அவ்வாகாரம் இரத்தத்தினலேயே கொடுக்கப்படுகிறது. ஆதலால் பல அவயவங்கட்கும் ஆகாரத்தைக் கொண்டுபோய்க் கொடுப்பதற்காக நம்முடலில் இரத்தோட்டம் ஒன்று ஏற்பட்டிருக்கிறது. இவ்விரத்தோட்டமானது ஓரிடத்திலிருந்து வேறோரிடத்திற்கு ஓடுவது நம் ஹிருதயமானது மாறி மாறி ஓர் வத்தம்போல் அவ்விரத்தத்தை இரத்தக் குழாய்களுள் இறைப்பதினல் தான். இம்மாதிரி இரைத்தலையே நாம் அது "படபட" வென்றடித்துக் கொள்வதாக உணருகிறோம்.

ஒரு மனிதன் தேகாரோக்கியத்துடனிருக்க வேண்டுமானல் அவனுடலிலுள்ள ஹிருதயமானது 1 நிமிஷத்திற்கு இத்தனை முறை அடித்துக்கொள்ள வேண்டுமென்று கணக்கிட்டிருக்கின்றனர். அத்தனை முறையின்றி அதற்கதிகமாகவோ குறைவாகவோ அடித்துக்கொண்டால் அவனுக்கு ஏதோ வியாதி சம்பவித்திருக்கிறதென்றே நாம் அறியவேண்டும்.

இரத்தக்குழாய்கள் இரண்டு விதப்பட்டன. அவைகளில் ஹிருதயத்திலிருந்து அவயவங்கட்கு சுத்த இரத்தத்தைக் கொண்டுபோகும் சுத்த இரத்தக் குழாய்கள் என்பன ஒன்று, மற்றொன்று, அவ்வவயவங்களிலிருந்து அசுத்த இரத்தத்தைச் சுத்தி செய்வதற்காகத் திரும்பவும் ஹிருதயத்தினிடம் கொண்டு வரும் அசுத்த இரத்தக் குழாய்கள் என்பன. இவைகளுள் சுத்த இரத்தக்குழாய்களில் இரத்தமானது ஹிருதயம் இறைப்பதற்கேற்றபடித் துள்ளித்துள்ளியே நகருகிறது. அசுத்த இரத்தக் குழாய்களிலோ இரத்தம் ஆற்றில் தண்ணீர் ஓடுவது போலவேயே தடையின்றி ஒரே ஓட்டமாய் ஓடுகிறது. ஆகையால் ஹிருதயம் அடித்துக்கொள்ளுவது போலவேயே இச்சுத்த விரத்தக் குழாய்களும் அடித்துக்கொள்ளுகின்றன. ஆதலால் இக்குழாய்களிலிருந்து நாம் எப்படி அடித்துக்கொள்ளுவதென்பதை அறியலாம்.

நம் கைமணிக் கட்டிலுள்ள நரம்புகளின் நடுவில் ஓர் சுத்த இரத்தக்குழாயானது ஓடிக்கொண்டிருக்கிறது. இக்குழாயிற் கையை வைத்து தான் வைத்யன் நம் நாடியையுணர்கிறான். அக்குழாய் எப்படியடித்துக்கொள்ளுகிறதென்பதிலிருந்து நம் ஹிருதயத்தின் நிலையையும், அதிலிருந்து நம்முடைய தேக நிலையைப் பற்றியும் அறிவது இயலுகிறது. உதாரணமாக நாடி அதிகமாகவும் வேகமாகவும் அடித்தால் அதிலிருந்து அம்மனிதனுக்கு ஏதோ ஜுரம் வந்திருப்பதாக அறியலாம்.

---




## பஞ்சகோசங்கள்.

(15-2-31-ந்தேதி தொடர்ச்சி.)

வருணபகவான், மனோமய கோசத்தை ப்ருகு மகரிஷிக்குத் தெளிவாக உபதேசித்து விட்டு மனோமய கோசத்தையும்விட ஸூக்ஷ்மமான விக்ஞானமயகோசத்தை உபதேசிக்கத் தொடங்கினார். 'ஒவ்வொருவனுக்கும் மனதில் தோன்றும் தோற்றங்களைப்பற்றி ஞானமிருந்தால்தான் அந்தத் தோற்றங்களை அறியமுடியும். ஆகையால் இந்த மனத் தோற்றங்களுக்கு அந்தராத்மாவான அறிவு முக்கியமாகும். இந்த அறிவு இல்லாவிட்டால் மனத்தோற்றங்கள் பலனற்றவை. இந்த அறிவால்தான் கர்மங்களைச்செய்யவும், வேண்டியதை நிர்ணயிக்கவும், வேண்டாததை நிராகரிக்கவும் முடிகிறது. மனதில் எது தோன்றினாலும் அதை அறிவால் தெரிந்து கொள்கிறோம். இதுவே விக்ஞானமய ஆத்மா. இந்த விக்ஞானமய ஆத்மாவிற்கு அந்தராத்மாவாக விருப்பது ஆநந்தமய ஆத்மாவாகும். ஞானத்தால்ஒரு காரியத்தைச்செய்தால் ஏதாவது பலன் கிடைக்குமென்று கர்மத்தைச் செய்ய ஆரம்பிக்கிறோம். அதாவது அந்த பலனால் நமக்கு ஏற்படக்கூடிய ஆநந்தத்தைக் கோருகிறோம். ஆகையால் அறிவைத் தூண்டுகிறது ஆநந்தமே. அந்த ஆனந்தத்தைத் தேடி ஞானத்தைக் கொண்டு காரியங்களைச்செய்ய உத்தேசிக்கிறோம். மனிதன் செய்யும் ஒவ்வொருகாரியமும் ஆநந்தத்தைக்கோரியே செய்வதாகும். இந்த ஆநந்தமயமான பிரம்மம் நிகரற்றது. எங்கும் சம்பூர்ணமாக நிரம்பியுள்ளது. இந்த ஆநந்தத்தை வாக்காலும் மனதாலும் வர்ணிக்க முடியாது. ஆநந்தத்தை அனுபவிக்க மாத்திரம் முடியுமே தவிர நிர்ணயிக்க முடியாது. முடிவுள்ள அல்ப பலனைத் தேடினால் அது சீக்கிரத்தில் அழிந்து போய் மீண்டும் ஆநந்தத்தைத் தேடி இதர காரியங்களைச்செய்ய யத்தனிக்கிறோம். பலவிதமான சுகங்களைத் தேடிய போதிலும் அவைகளால் 'ஏற்படக்கூடிய ஆநந்தம் ஒன்றே. எவ்விதத்திலும் எந்தக் காரியத்தைச் செய்தபோதிலும் நிர்ணயிக்க முடியாத ஆநந்தத்தை உத்தேசித்தே செய்கிறோம். ஆகையால் இந்த ஆனந்தம் முடிவற்றது. இதுவே சத்தானதும், ஞானமயமானதும் முடிவற்றதுமான ஆநந்தமயமான பிரம்மம். பூர்ண நித்ரையில் ஒவ்வொருவனும் சரீரம், பிராணன், மனது, ஞானம் முதலிய வித்யாசங்களற்று, புத்திரன், மனைவி, முதலிய விசேஷ ஞானங்களற்று ஸர்வக்ஞனாகி ஆநந்த மயமான ஆத்மஸ்ரூபத்தை அனுபவிக்கிறான். ஆநந்த மயமான ஆத்மாவிலிருந்து சகலமும் உண்டாகி ஸகலமும் ஜீவித்து ஸகலமும் ஆநந்தத்திலேயே லயமடைகிறது. ஆநந்த மயமானபிரம்மத்தால் ஸகல வித்தியாஸங்களும் உண்டாகின்றன. ஸகல காரியங்களும் செய்யப் படுகின்றன. இவ்விதம் உண்டானவைகள் பூர்ணமான ஆநந்தத்தால் வியாபிக்கப்பட்டிருப்பதாலும் இந்த ஆநந்தத்தை வாக்காலும் மனதாலும் நிர்ணயிக்க முடியாததாலும் ஸகல சிருஷ்டிகளும் ஆநந்த மயமான ஸாகரத்தில் மூழ்கியிருப்பதை மறந்து அந்த ஆநந்தத்தைத் தேடித்திரிகின்றன.

ஹிருதயாகாசத்திலிருக்கும் இந்த ஆநந்த மய ஆத்மாவை அடைந்தவன் பயமற்றவனாகிறான். ஹிருதயாகாசத்திலிருக்கும் பிரம்மமே ஆகாசம் முதலியவைகளை சிருஷ்டித்து ஆநந்த மய கோசத்திலிருந்து அன்ன மய கோசம் வரையில் வியாபித்து வர்ணிக்கக்கூடியதும் வர்ணிக்கக்கூடாததும், நித்யமானதும் அனித்யமானதும், ஸத்யமானதும் அஸத்யமானதுமாகத் தோன்றுகிறது. தான் தான் இந்த பரமாத்மா என்று அறிந்தவன் பயமற்றவனாகிறான். அவித்யையால் வித்யாசத்தை யடைகிறவன் பயமுள்ளவனாகிறான். ஆகையால் இந்த ஆநந்தாத்மா பயதிற்கும் நிர்பயத்திற்கும் காரணமாகிறது. அந்தப்பயத்தால் ஒவ்வொன்றும் தம் தம் வேலைகளைச் செய்கின்றன. பிராணனும் அபானமும் வேலை செய்கின்றன. சந்திர சூர்யாதி தேவதைகளும் தங்கள் வேலைகளைச் செய்கின்றன. சூர்யனிலும் புருஷனிலுமிருப்பவன் பரமாத்மாவே. இவரே ஸர்வவ்யாபி; ஸர்வாந்தர்யாமி, க்ஷேமத்தைச் செய்கிறவராயும் காப்பாற்றுகிறவராயும் பிராணிகளில் வஸிக்கிறார். பரமாத்மாவான பரம புருஷனே பஞ்சகோசங்களை உண்டாக்கி அவைகளுள் பிரவேசித்து தமது மகிமையை வெளித் தோற்றமாக்கி விச்வமாகப் பார்க்கிறார். வருண பகவான் உபதேசத்தைக் கேட்டு ப்ருகுமகரிஷி பிரம்மக்ஞானத்தை அடைந்தார்.

3-3-31-ந்தேதி மதுரையில் நடந்த கூடலழகர் தெப்போற்சவம் B.K.V.



வேலூர் ஜெயிலிலிருந்து விடுதலை யடைந்த ஸ்திரீ தொண்டர்களும் தமிழ்நாடு காரிய சபைத்தலைவர் ஸ்ரீமான் பாஷ்யமும். P.P.B.




7-ந்தேதி சென்னை சைனபஜார் ரோட்டில் நடந்த ஸமரஸக் கொண்டாட்ட ஊர்வலக் காட்சி. P.P.B.



திருச்சியில் கதர் காட்சியைத் திறந்து வைத்த ஆசார்யா ஸர் பி. வி. ரே. B.V.S.



பங்களூர் ஸ்திரீ சங்கத் தலைவியாக தேர்ந்தெடுக்கப்பட்ட மிஸஸ் என். வெங்கிடராவ். R.V.Rao.



இம்மாத முடிவில் நடைபெறும் கராச்சி காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டித் தலைவர் டாக்டர் சோயித்ராம் கித்வானி. R.S.A.



ஆந்திர ஸர்வகலாசாலை புரோசான்ஸலராக நியமிக்கப்பட்ட பொப்பிலி ராஜா. P.P.B.



சென்னை புதிய போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் மிஸ்டர் ரிச்சர்ட்ஸன். P.P.A.



புதுக்கோட்டை சமஸ்தான திவானகவிருந்து வேலையிலிருந்து விலகின ராவ்சாகிப் ஜி. கணபதி சாஸ்திரிகள். G.V.



புதுக்கோட்டை சமஸ்தான புதிய திவான். ராவ்பகதூர் ஈ. கே. கோவிந்தன். R.V.Rao



ரயில்வே சிக்கனத்தைப்பற்றி வியாஸமெழுதி முதல் பரிசு பெற்ற ஜி. ஐ. பி. ரயில்வே டிபுடி சீப் ஆடிட்டர் ஸ்ரீமான் கே. வி. ஸ்ரீனிவாஸன் P.P.A.




திருச்சியிலிருந்து திருநெல்வேலிக்கு மாற்றப்பட்ட ஜில்லா போலீஸ் சூபிரன்டென்டெண்ட் கான்பகதூர் ஷரீப் மகமதலி சாகிப் பகதூர், திருச்சி போலீஸ் உத்யோகஸ்தர்களால் பிரவுபசாரணை செய்யப்பட்டபோது எடுத்த படம். P.S.

PRODUCTIONS

மிருச்சகடி அல்லது வஸந்தஸேனா என்னும் ஸினிமாப் படத்தில் நடிக்கும், ஸ்ரீமதிகள் எஞ்ஷி ராமராவ், கமலதேவி சட்டோபாத்யாயா முதலிய பிரமுகர்கள்.



கல்கத்தாவிற் கருகில் ஹுக்லி நதிமேல் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கும் பாலத்தின் தோற்றம். இதன்மேல் இரண்டு இருப்புப் பாதைகளும் இரண்டு ரஸ்தாக்களும் செல்லுகின்றன. இதுவே இந்தியாவிலுள்ள பாலங்களில் மிகவும் பெரிது. இதைக் கட்ட 4 கோடி ரூபாய்களாயின.

W.N.P.S.



ஸ்விட்ஜர்லண்டில் ஸெயின்ட மாரிட்ஜில் நடக்கும் ஸ்கையிங் விளையாட்டுக் காட்சிகள்.



இதாலி தேச விமான விஷயங்களைக் கவனிக்கும் மந்திரி ஜெனரல் பால்போ ஒரு விமான யாத்திரையின் பிறகு வரவேற்கப்பட்ட காட்சி.
(இவர் இதாலி தேசத்தில் முஸ்ஸோலினிக்குப் பிறகு முக்கியத் தலைவராக விளங்குகிறார்.)

# விவசாயப் பகுதி.

## பலவித கானா அல்லது கல்வாழை

(ஸ்ரீமான் பி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார், பி. ஏ., பி. எல். எழுதியது.)

### பலவித கானா அல்லது கல்வாழைகள்.

செடி வியாபாரிகளின் விலை ஜாபிதாக்களில் சுமார் 500 கானாக்கள் பலவித அழகிய பெயர்கள் கொடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒரேவகைச் செடிக்கே நான்கைந்து பெயர்கள் கொடுத்து ஏமாற்றுவதும் உண்டு. தோட்டங்களுக்குப் போய் நேரில்நாமே பார்த்துப் பொறுக்கியெடுத்த போதிலுங்கூட, அனேகர் சில அழகில்லாதவைகளையும் வாங்கிவிடுகிறார்கள். அல்லாமலும், அனேக தோட்ட வியாபாரிகளிடம் சில அழகிய ஜாதிகளே உண்டு. ஆகையால் கானா நிபுணர்கள் புகழும் ஜாதிகளை ம-ா-ா-ஸ்ரீ முனுசாமி நாய்க்கர் அவர்கள் உதவியைக் கொண்டு எழுதியிருக்கிறேன். கானாவை வளர்க்க விரும்புவோர் இதன் பிரகாரம் சென்னை அக்ரிஹார்டிகல்சுரல் தோட்டத்திற்காகிலும், மற்ற ஊர்களிலுள்ள நல்ல தோட்டங்களுக்காகிலும் எழுதிவருவித்து வளர்த்தால், அழகிய மலர்களைக் கண்டு ஆனந்திப்பாரென நம்புகின்றேன். தற்காலத்தில் தட்டாரப்பூச்சிகள் போன்ற பூக்கள் புஷ்பிக்கும் ஆர்கிட் ஜாதிகளை அனேகர் விரும்புவதில்லை. ஆர்கிட் ஜாதிப் பூக்களுள்ள பூங்கொத்தில் எல்லாப் பூக்களும் ஒரேகாலத்தில் புஷ்பிப்பதில்லை. ஆதலால் பத்துப்பதினைந்து பெரிய பூக்கள் பலவர்ணங்கள் உள்ளவைகளாய் ஏக காலத்தில் புஷ்பிக்கும் போது உண்டாகும் கண்ணையும் மனத்தையும் கவரும் அழகிய காட்சி '(ஆர்க்கிட்)' பூக்களில் உண்டாவதில்லை.

### பெயர்களும் விவரமும்.

(1) 'ஆக்னிஸ் மார்டின்;' தாமரைப்பூ வர்ணமுள்ளது.

(2) பிளாக் நைட்':—இலை தாம்பர வர்ணமுள்ளது. புஷ்பங்கள் அதிக சிவப்பாயிருப்பதால் இதை இங்கிலீஷில் 'கருப்புவீரன்' என்கிறார்கள்.

(3) 'டியூக் ஆப் கன்னிங்காம்':—இலை பச்சை நிறமுள்ளது. பூ பெரிதாயும் மேல் சொன்ன 'பிளாக்நைட்'டைப்போல் கருத்த சிவப்பாயுமிருக்கும். ஆனால் பலர் இதைவிட 'பிளாக்நைட்டை'யே விரும்புகின்றனர்.

(4) 'டோனால்டு':—இலை தாம்பர வர்ணமுள்ளது. சிவப்பு புஷ்பங்கள். இதை ஓர் மிகவும் அழகான ஜாதியாகக் கருதுகின்றனர்.

(5) 'ட்ரீம்':—பூ பெரியது. ரோஜா வர்ணமுளளது.

(6) 'பிளேம்':—இது மேல் சொன்ன 'ட்ரீமை'ப் போலவேயிருக்கும்.

(7) 'ஹங்கேரியா.'—பூக்கள் தாமரை நிறமுள்ளவை. பூக்குலை மிகவும் பெரியது. இலை பச்சை.



சென்னையில் 1ந்-தேதி நடந்த மிருகக்காட்சி சாலையை கவர்னர் திறந்து வைத்தபோது எடுத்த படம். B.V.S.

(8) 'மேய்ன்ஸி':—இதை ஐரோப்பியர் மிகவும் அழகானதாய்க் கருதுகின்றனர். இதன் பூ நம்சதை நிறம்போல் இருக்கும். இலை பச்சை.

(9) 'மானிஹோவா':—இது ரோஜா வர்ண புஷ்பம் உள்ளது. இலை தாம்பர வர்ணமுள்ளது. செடி குட்டையாயும் அழகாயுமிருக்கும்; சிறு தொட்டிகளில்கூட வளர்க்கலாம்.

(10) 'மாஸ்டர்-பீஸ்':—கானாக்களுள் எல்லாம் இதுவே சிறந்தது என்னலாம். இதன் பூ தங்கநிற மஞ்சள் கலந்த காவி நிறமுள்ளது. பூ மிகவும் பெரியது. இலை பச்சை. இதற்குக் கிராக்கி அதிகம்.

(11) பிரின்ஸ் ஆஸ்டிரியாஸ்.—இதன் பூக்கள் சிவப்புப் புள்ளிகளுள்ள மஞ்சள் நிறமுள்ளவை. ஆர்கிட் பூக்களைப் போலிருக்கும். பூக்களும் பெரியவை. ஆர்கிட் பூ கானாக்களுள் இதுவே சிறந்தது.

(12) குயின் ஹெலன்.—பூக்கள் மிகவும் பெரியவை. சில மலர்ந்த பூக்கள் ஆறு அங்குலம் குறுக்களவு உள்ளவைகள். இலைகளில் பச்சையும் தாம்பர வர்ணமும் கலந்திருக்கும். மற்றும், ஒரே செடியில் சில பூக்கள் சிவப்பாயும், சில மஞ்சளாயும் இருக்கும். ஆகையால் பலரும் இதை விரும்புகின்றனர்.

(13) 'பிரஸிடெண்ட்':—பூ சிவப்பு, ஆறு அங்குலம் குறுக்களவு உள்ளது. தளங்கள் அல்லது பூ இதழ்கள் இரண்டங்குல நீளம் இருக்கின்றன.

(14) 'டிரையம்ப்'.—இதன் குலைகளில் பத்துப் பதினைந்து பூக்கள் கூட இருக்கும். பூக்கள் தங்க நிற மஞ்சளாயிருக்கும். இலைகள் கருத்த தாம்பர நிறமுள்ளவை.

(15) 'வீனஸ்'.—புஷ்பங்கள் ரோஜா நிறமுள்ளவை. பெரியவை. ஆர்கிட் பூக்களைப் போல் இருக்கும். இலை வாழையிலைபோன்ற பச்சை. இது மிகவும் அழகானது.

மேல்கண்ட பதினைந்து ஜாதிகளும் அழகிய புதிய ஜாதிகள். ஆரம்பத்தில் இவைகளை மட்டும் பாத்திகளில் வளர்த்தால் போதும்.

சில முக்கிய குறிப்புகள்:—

(1) கானுக்களை நிழலில் வளர்க்கக்கூடாது.

(2) நிலத்தைச் சுமார் மூன்றடி ஆழமாகினும் வெட்ட வேண்டும்.

(3) மண் களிமண் போல் அழுத்தமாயிருக்கக் கூடாது.

(4) அதிக எருவு போட வேண்டும்.

(5) நடும்போது கொஞ்சம் ஆழமாகவே நடலாம். நட்ட பிறகு, ஆரம்பத்தில் இரண்டு மூன்று வாரம் வரையில் நாள் விட்டு நாள் மண் ஈரமாகும் படிமட்டும் கொஞ்சமாக நீர் வார்த்து வரவேண்டும். பிறகு அடிக்கடி அதிக நீர் பாய்ச்ச வேண்டும். தாயும் அழகாயும் இருக்க மாட்டா. ஆகையால் இரண்டு வருஷத்திற் கொருதரம் நிலத்தை மாற்றி புதிய பாத்திகளில் இவைகளை நடவேண்டும்.

(9) இதல்லாமலும் ஒவ்வொரு செடியையும்நட்டு ஆறு மாதமான பிறகு வேருடன் பிடுங்கியெடுக்க வேண்டும். அவைகளின் அடியிலுள்ள முற்றிய கிழங்குகளை அறுத்துவிட்டுப் புதிதாய் வளரும் இலைமொக்குகளுள்ள இளங்கிழங்குகளை மட்டும் அறுக்கக் கூடாது. இப்படி பாத்திகளிலிருந்து ஆறுமாதத்திற்கொரு தரம் செடிகளைப் பிடுங்கி எடுக்கும்போது, பழைய மண்ணை



சென்னை மிருகக் காக்ஷியில் வந்திருந்த எருமைக்கடா B.V.S.



சென்னைமிருகக் காக்ஷியில் வந்திருந்த எருது. B.V.S.

(6) கானுக்களைப்பெரிய பூந்தொட்டிகளில் வளர்க்கலாம். பீப்பாய் அல்லது மாத் தொட்டிகளில் வளர்த்தால், மண் தொட்டிகளில் வளர்வதைவிட செடிகள் நன்றாய் வளரும்.

(7) பூ வாடிவரும்போது நடுவிலிருந்து கிளம்பும் பூக் காம்பு அல்லது குலையை அடியுடன் நிலமட்டத்திற்குச் சமமாய் அறுத்தெறியவேண்டும். பிறகு புதிய பூக்குலைகள் சீக்கிரம் வரும்.

(8) இந்தச் செடிகளின் பக்கத்தில் கன்றுகள் முளைப்பதால், செடிகள் அதிக நெருக்கமாய்ப்போய் பூக்கள் பெரி யெடுத்துவிட்டு வளமான புது மண்ணை எருவுடன் கலந்து போட்டு பாத்திகளை நிறப்ப வேண்டும். பிறகு இப்படி எடுத்த ஆறுமாதச் செடிகளை திரும்பவும் அந்தப் பாத்திகளில் நடவேண்டும்.

(10) கானுச்செடிகளை எல்லா மாதங்களிலும் நடலாம். ஆனால் மழைகாலம் ஆரம்பிப்பதற்கு இரண்டு மூன்றுவாரங்கள் முன்னிட்டும், மழை ஓய்ந்த பிறகு இரண்டொரு வாரங்கள் கழிந்த பிறகும், மேல் சொன்னமாதிரி ஆறுமாதத்திற்கொருதரம் செடிகளைப் பிடுங்கி நட்டால் சற்றேறக் குறைய வருஷம் முழுதிலும் இந்தச் செடிகள் புஷ்பித்துக் கொண்டேயிருக்கும். சாணம் கரைத்து அழுகியநீரை இவைகள் பூர்க்குங்காலத்தில் அடிக்கடி வார்ப்பது நல்லது.

(11) சில ஜாதிகளில் அதிக காய்கள் உண்டு. சில ஜாதிகள் அதிகமாய்க் காய்ப்பதில்லை. குறைவாய்க் காய்க்கும் ஜாதிகள் எத்தனை வருஷம் வளர்ந்தபோதிலும் அதிக உயரமாய் வளராமலும், பூக்களின் அழகு குறையாமலும் இருக்கும்.




# நோயற்ற வாழ்வு

## தேகாப்பியாசம்.

(குமாரதாஸன் எழுதியது.)

நல்ல காற்றில் தேகாப்பியாசம் செய்தல் நாம் சரீர ஆரோக்கியத்துடன் வாழ்வதற்கு முக்கியமான ஏதுக்களில் ஒன்ருகும். எந்த மனிதன் நல்ல வெளிக் காற்றில் தேக முயற்சி செய்கிருனே அவன் நல்ல சரீர சுகத்துடன் வாழ்கிருன் என்பது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட விஷயங்களில் ஒன்று என்று கூறலாம். சரீர முயற்சி செய்யவேண்டும் என்ற இச்சை இயற்கையிலேயே ஏற்பட்ட உணர்ச்சிகளில் ஒன்ருகின்றது. சிறிய குழந்தைகள், பள்ளிப் பிள்ளைகள் இவர்கள் அமைதி இன்றி இருப்பது இதற்குத் தகுந்த அத்தாட்சி ஆகின்றது. நம்முடைய சரீரமானது, ஒரு குறித்த அளவிற்குள் அப்பியாசம் செய்யப்பட்டால் அதிக பலத்தையும் திடத்தையும் அடையும் குணத்தை உடைத்தாய் உளது. சரியானபடி உபயோகிக்கப்பட்ட தசையானது நன்ருக வளர்ந்து, பருத்து, நல்ல பலம் உடையதாக ஆகின்றது. அதுபோலவே உபயோகமே செய்யப்படாத தசையானது க்ஷீணித்து, இரத்த ஓட்டம் குறைந்து, பலம் குன்றித் தன் வேலையைச் சரிவரச் செய்ய முடியாத நிலைக்கு வந்துவிடுகின்றது என்பது அனைவருக்கும் தெரிந்த விஷயமே. 'சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்தால் ஊழல் சதைதான் தள்ளும்' என்னும் நாடோடிச் சொல்லில் இருந்தே நம் முன்னேர்கள் இந்த உண்மையை நன்கு உணர்ந்தார்கள் என்பது விளங்குகின்றது.



பிரான்ஸில் சிசுக்காட்சியில் முதல் பரிசுபெற்ற குழந்தை G.S.A.

சரீர முயற்சி எடுப்பதால் உடம்பில் உள்ள சாதாரணத் தசைகள் பல உருவத்துடன் இருதயத்தின் தசை, நுரை ஈரல் பைகளின் தசை முதலிய எல்லாத் தசைகளும் அப்பியாசப் படுத்தப் படுகின்றன. மேலும் நரம்புகளும் மூளையும் சுறுசுறுப்புற்றுப் பலம் அடைகின்றன. தவிரவும் நமது சரீரத்தில் உள்ள கழிவு செய்யும் அவயவங்களும் உள்ளடக்கி வைத்துத் தக்கவாறு வெளிப்படுத்தும் அங்கங்களும் தூண்டப்பட்டுத் தங்கள் வேலைகளைச் செவ்வனே செய்கின்றன. சரீர முயற்சி செய்வதால் இருதயத்தின் நடையானது துரிதப்படுத்தப்பட்டுப் பலத்துடன் அடித்துக்கொள்ளுகின்றது. ஆனதினுல் சரீரம் முழுவதும் இரத்தப் பாய்ச்சல் அதிகப் படுகின்றது. இதனுல் சரீரத்தில் உள்ள எல்லா அங்கங்களும் பிராண வாயுவினுல் பலப்படுத்தப்பட்டு, போஷிக்கப் படுகின்றன. மேலும் ஆங்காங்கு உள்ளகழிவுகள் நீக்கப் படுகின்றன. மிதமான தேகாப்பியர்சம் செய்யும் பொழுது, சுக நிலையில் இருக்கும் இருதயத்தின் நடையானது வலுவுடனும் துரிதமாகவும் நடந்த பொழுதிலும், ஒழுங்காயும், சமமாகவுமே நடைபெறும். ஆனல் அதிகநேரம் தேகமுயற்சி செய்து இருதயத்தை நிர்ப்பந்தப் படுத்திஞல் அதன்நடைவலுக்குன்றி, ஒழுங்கின்றி, துரிதத்துடன் சமமின்றி நடைபெறும். சரியான சரீர அப்பியாசம் எடுக்காததினுல் இருதயத்தின் தசைகள் பலம்குன்றக் காணலாம். அபரபக்ஷத்தில், பழக்கமில்லாத தேகாப்பியாசம், அதிக நேரம் சரீர முயற்சி செய்தல், இவைகள் மார்துடிப்பு முதலிய இருதய நோய்களைவிளைவிக்கலாம். 'அளவுக்கு மிஞ்சினுல் அமிருதமும் நஞ்சாகும்' என்னும் சொல்லை மறக்கக்கூடாது. இவ்வாறு தளர்ச்சி ஏற்பட்டால், ஜாக்கிரதையுடன்தேக முயற்சி செய்தும், போதுமான அளவு இளைப்பாறியும் குணப்படுத்தி விடலாம். இருதய வியாதி உடையவர்கள் திடீரென்ருே, அல்லது பலமாகவோ தேக முயற்சிகளைச் செய்யக் கூடாது. வயது ஆனவர்களும் இவ்வாறு செய்தல் உசிதமன்று. பொதுவாக அவரவர்கள் சரீரவாகுகளுக்கு ஏற்றவாறு போதுமான அளவு நல்ல வெளிக் காற்றில் தேக முயற்சி எடுத்துக்கொண்டால் தான் நாம் தேக ஆரோக்கியத் துடன் வாழலாம்.

சரீர முயற்சி எடுப்பதால் நுரை ஈரல் பைகள் வேகமாக வேலை செய்கின்றன. தேகாப்பியாசம் செய்யும்பொழுது மூச்சு விடும் கணக்கானது அதிகப்படுவதுடன் உள்ளே இழுக்கப்படும் காற்றின் அளவும் அதிகரிக்கின்றது. இதே மாதிரியில் வெளியே அனுப்பப்படும் கரியமல வாயுவின் அளவும் அதிகரிக்கின்றது. இவ்வாருகச் சரீரத்தில் உள்ள கழிவு வெளிப்படுத்தப்பட்டு, இரத்தம் சுத்தி செய்யப்படுகின்றது. அதிக்கிரமித்த மூச்சு விடுதல் கஷ்டமாகி விடுகின்றது. தேகாப்பியாசம் செய்வதால் நம் இச்சைக்கு உட்பட்ட எல்லாத் தசைகளும் வலுவடைந்து, நமது இஷ்டங்களை நிறைவேற்றுவதில் சுறு சுறுப்பாக இருக்கின்றன. ஆனுல் நீடித்த காலத்திற்கு அளவுக்கு அதிக்கிரமித்த தேகாப்பியாசம் செய்தால், தசைகள் வளருவதற்குப் பதிலாக க்ஷீணிக்கத்துவக்கும். கிரமத்திற்கு உட்பட்ட சரீராப்பியாசம் செய்வதால், மனதும் சுறுசுறுப்பாக வேலை செய்யும், புத்தியும் கூர்மையுறும். வயிற்றின் அங்கங்கள் தூண்டப்படுவதால் தேகாப்பியாசம் செய்வதால் ஜீர்ண சக்தி அதிகரிக்கின்றது. தோல் வேலை செய்து வியர்வை உண்டாவதால், நமது சரீரத்தில் உள்ள கழிவுகள் இவ்விதம் வெளிப்படுவதற்குத் தேகாப்பியாசம் ஹேதுவாகின்றது.

ஒரு மனிதன் இவ்வளவு அளவு தேகாப்பியாசம் செய்யவேண்டும் என்று நிர்ணயித்துக் கூறுவதற்கு இல்லை; அவரவர்கள் சரீர வாகுக்கும் பலத்திற்கும், தேக ஸ்திதிக்கும் தக்கவாறு இந்த அளவானது கூடவோ அல்லது குறையவோ செய்யும். இது விஷயத்தில் சற்று ஜாக்கிரதையாக இருத்தலே நலம். தற்காலத்தில் சிலர் அதிக தேக முயற்சி செய்வதில் மிகவும் ஊக்கமுடையவர்களாக இருக்கிருர்கள். மேல் நாடுகளில் இது ஒரு வெறியாகப் பிடித்திருக்கிறது என்று கூடச் சொல்லலாம். இவ்வாறு அதிக்கிரமித்த சரீர முயற்சி செய்வதால் கெடுதலே விளையும் என்று முன்பே கூறினேம். ஆகையினுல் முடிச்சு முடிச்சாய் நட்டால் கோட்டை கோட்டையாக விளையாது என்பதை நினைவில் வைத்துக்கொண்டு, அவரவர் தேக சக்திக்கு ஏற்றவாறு, போதுமான அளவு தேகாப்பியாசம் செய்யவேண்டும். எவ்விதமான தேகாப்பியாசங்கள் எல்லாத் தசைகளுக்கும் வேலையைக் கொடுக்கக்கூடியன என்பதை இனி ஆராய்வோம்.

---

### கிழவனின் தந்திரம்.

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

நடேசன் அவரைக் காணவந்தான். அவனைக் கண்ட கோகுலர் புன்சிரிப்புடன் அவனை ஆஸனத்தில் அமரச் செய்தார்.

கோகுலர்:—"ஐயா! வீடு எப்படி யிருக்கிறது? உமக்குப் பிடித்திருக்கிறதா? ஏன் அவ்வளவு விலை கொடுத்து வாங்கினீர்? மூர்மார்க்கெட்டிலுள்ள உமது கடையை அந்த வீட்டிலேயே வைக்கப்போகிறீரா?" என்று அடுக்கடுக்காய்க் கேள்விகள் கேட்டார்.

நடேசன்:—(முகமலர்ச்சியுடன்) அதிருக்கட்டும். போனவாரம் நீங்கள் கிழவரின் உயில் ஒன்றைப் பற்றி பிரோபேட்டுக்கு மனுக்கொடுத்தீர்களே. அந்த உயிலின் தேதி யென்ன? என்றான்.

கோகுலர்:—ஏன் கிழவரின் உயிலில் இவ்வளவு அக்கரை உமக்கு? அதன் தேதி நவம்பர்மீ 10உ

நடேசன்:—அப்படியா சந்தோஷம்! இந்தக் கடிதத்தைப் பாருங்கள். இது தற்செயலாக நான் ஏலத்திலெடுத்த கிழவரின் கெடியாரத்திலிருந்து அகப்பட்டது. இது நவம்பர்மீ 12உ எழுதப்பட்ட கிழவரின் உயில். இதில் முன் உயில்களை ரத்து செய்திருக்கிறதாகவும், தாராபாய் தன் சாமான்களை மாத்திரம் விற்கலாமே தவிர தன் புராதன வீட்டை ஒரு நாளும் விற்கக் கூடாதென்றும் அப்படி அவள் விற்றுவிட்டால், அந்த வீட்டை யார் வாங்குகிறாரோ அவர், தன் ஆஸ்தியான சுமார் 30,000 ரூபாயில் 20,000 ரூபாயை யதேச்சா வினியோகமாக அடையவேண்டுமென்றும் அதின் வரும்படியைக் கொண்டு ஷை வீட்டை ரிபேர் செய்து நல்ல ஸ்திதியில் வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், பாக்கியிருக்கும் ஆஸ்தியே தன் பேத்தி தாராபாய்க்குச் சேரவேண்டுமென்றும், கிழவர் எழுதியிருக்கிறார். இந்த உயிலைப் பாருங்கள். கிழவர் ஸ்வஹஸ்தலிகிதமாக எழுதி இரண்டு சாக்ஷிகளும் போடப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த உயிலை அனுஷ்டானத்திற்குக்கொண்டு வந்து, எனக்குச் சேரவேண்டிய 20,000 ரூபாயையும் கொடுத்து விடுங்கள். தங்கள் சிரமத்திற்குத் தகுந்த பீஸை நான் கொடுத்து விடுகிறேன்"- என்று சரமாரியாய்ப் பொழிந்தான்.

கோகுலர் (சிரித்துக் கொண்டு) அப்பா! அவசரப் படாதே! இதற்குப் பிறகு நவம்பர்மீ 13உ எழுதிய உயில் ஒன்று நேற்றுத்தான் எங்களுக்குக் கிழவரிடமிருந்த பெரிய கடியாரத்திலிருந்து அகப்பட்டது. அதன்படித் தாராபாயே கிழவரின் சர்வ சொத்துக்களுக்கும், விற்கவும் வாங்கவுமுள்பட சகலபாத்தியஸ்தையாகியிருக்கிறாள். அந்தஉயில் எல்லாவற்றிற்கும் கடைசியில் எழுதப்பட்டதால் அதுதான்சட்டப்படிச்செல்லுபடியானது." என்றார்.

இதைக்கேட்ட நடேசன் இடிவிழுந்தவன் போலானான். அப்படியே நாற்காலியில் சாய்ந்து விட்டான். அவன் சுயஉணர்வுஅடையக்கால் நாழிகை நேரம் சென்றது. அவன் தன்னிடம் அகப்பட்ட உயிலில் பூர்ண நம்பிக்கை வைத்து, தன் சொந்த ஆஸ்திகளை அடமானம் வைத்து 15000 ரூபாய் வரையில்கடன்வாங்கிக் கிழவரின் வீட்டையும் சாமான்களையும் ஏலம் எடுத்தான். 'பேராசைபெருநஷ்டம்' என்றும், தான் கிழவருக்குப் போட்டியாய் வியாபாரம் செய்து அவருக்கு நஷ்டம் உண்டாக்கினதற்கு, அவர் பூர்ணமாய்த் தன்னை நஷ்டப்படுத்தி விட்டதாக அறிந்து கொண்டான். தலைகுனிந்தவனாய் வீடு போய்ச் சேர்ந்தான். வீட்டு ஏலத்தில் நடேசனுக்குப் போட்டியாய் ஏலம் கேட்ட கனவான் மற்றொரு கெடியாரத்திலிருந்து மற்றொரு உயிலைக் கண்டுபிடித்தவரென்று நாம் சொல்லாமலே நம் வாசகர்களுக்கு விளங்கி யிருக்கும்.




## நூதன வாசக புஸ்தகங்கள் *

(அகஸ்தியதாஸன் எழுதியது.)

நான் இந்த வாரம் நூதன வாசக புஸ்தகங்களைப் பெற்றேன். அவை சென்னை சர்வ கலாசாலை ரிஸெர்ச் இன்ஸ்டிட்யூட்டில் வேலை செய்து வரும் ஸ்ரீமான் வேங்கடராஜுலு ரெட்டியாரால் தொகுக்கப்பெற்றன. சாஸ்திர சம்பந்தமாகவும் சரித்திர சம்பந்தமாகவும் வேறு வருணனைகளாகவும் எழுதப் பெற்ற பல கட்டுரைகள் வசன பாகத்தில் அமைந்துள்ளன. பதினெண் கீழ்கணக்கு நூல்களினின்றும் பல செய்யுட்கள் ஒவ்வொரு நூலிலும் சேர்க்கப் பட்டுள்ளன. இவை யெல்லாம் பள்ளிக்கூடங்களில் வாசக பாடங்களாக அமைவதற்கு ஏற்றவைகளாக உள்ளன. புதிய நாகரீகக் கொள்கைகளையும் அரசாங்க அமைப்பு முதலியவைகளையும் விளக்கும் சிற்சில கட்டுரைகளும் இவற்றின்கண் மிளிர்கின்றன. ஸ்ரீமான் ரெட்டியார் சில கட்டுரைகளை ஸ்ரீமான் க. நமச்சிவாய முதலியாரின் நூல்களினின்றும் சேர்த்துக் கொண்டிருக்கிறார். ரெட்டியாருடைய வசனநடை மிகவும் நன்றாக அமைந்துள்ளது; விஷயங்களைத் தெளிவாகக் கோர்வைப்படுத்திக் கூறும் அவரது திறமை மெச்சத்தக்கது. பாடங்களையும் கடினக்கிரமத்திலே அமைத்திருப்பதால் மாணவர்க்குப் பெரிதும் பயன் படுவனவாகின்றன.

ரெட்டியாரின் வசன நடை மாணவர்களுக்கு ஏற்றவாறு அமைந்துள்ளது; சில வித்வான்கள் பாட்டுடைச் செய்யுளுக்கேற்ற சொல்லணிகளையும் எதுகை மோனை முதலியவற்றையும் அறிய சொற் பிரயோகங்களையும் வசன நடையிலும் புகுத்தி வாசிப்போர்களின் மனதிற்கு அருவருப்பை விளைக்கின்றனர்; வசன நடைக்கு ஏற்ற குணங்கள் தெளிவும் ஒழுங்கும் வன்மையுமாம். இவை மூன்றும் செட்டியாரின் வசன நடையிலே நன்கு அமைந்துள்ளன; அவருடைய வாக்கியங்கள் அணிகளால் நம்மை மயக்குவதில்லை; ஒழுங்காக யுக்தியின் பலத்தால் மட்டுமே நம்முடைய மனதை வசீகரிக்கின்றன; சொல்ல வேண்டியவற்றைச் சொல்வன்மையோடு சொல்லிக் கேட்போருக்கு உண்மைகளை நன்றாக விளக்குகின்றன. இவ்வாறு வைதர்ப்ப ரீதியிலே வசன நூல்களை வித்வான்கள் எழுதுவது மிகவும் அரிதாயிருப்பதால் இவ்வாசக புஸ்தகங்களை முறையே வாசிக்கலானேன்.

இவ்வாறு நன்கு அமைந்த வாசக புஸ்தகங்களின் துவக்கத்திலே கடவுளைப்பற்றி ரெட்டியார் எழுதியுள்ளார். கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதற்குக் காரணங்கள் கூறி, உலகத்திற்கு நன்மை செய்வதே கடவுளுக்கு நாம் செய்யத் தக்க வழிபாடு ஆகும் என்று இவர் கூறியுள்ளது எனக்குப் பெரிதும் இன்பத்தை விளைத்தது. அடுத்த கட்டுரையானது, தாமிரவருணி நதியை யொட்டி எழுதப்பட்டுள்ளது. நதியினால் நமக்கு ஏற்படும் நன்மைகளை ரெட்டியார் இக்கட்டுரையிலே விவரித்துள்ளார். நதிகளை நாம் அறியாமலேயே மிகவும் அசுத்தப் படுத்துவது எவ்வளவு கேடு விளைக்கக் கூடியது என்பதை இவர் வற்புறுத்தியிருப்பது உசிதமே யன்றோ?

∴ இந்தக் கட்டுரையின் இறுதியிலே இவர் பின்வருமாறு கூறியுள்ளதை வாசித்துக் கொண்டே என் குருநாதரின் முன்னிலையை அடைந்தேன்.



விக்டோரியா ஹாஸ்டல் மாணவர்கள் சங்க வருஷாந்தக் கூட்டத்தின் போது பண்டித மோதிலால் நேருவின் படம் ஸ்ரீமான் ஏ. ரங்கஸாமி அய்யங்காரால் திறந்துவைக்கப்பட்டது. P.P.B.

"பாண்டிய நாட்டில் உள்ள பெரிய ஆறுகளுள் தாமிரவருணியே மிக்க சிறப்புடையது. தாமிரவருணியைப் புலவர்கள் பொருநை என்று கூறுவர்; தண்பொருநை என்பதும் உண்டு. தண் பொருநை என்னும்பெயர் தாம்பிரணி என்று மருவி வழங்கலாயிற்று. அதனைத் தாமிரவருணி என்று மாற்றிச் செம்பு போன்ற நிறமுடையது என்று பொருள் கூறுகின்றனர். செந்நிறமான நிலத்திற் பாய்வதனால் இப்பெயர் வந்தது என்பர். தாமிர வருணி யாற்று நீரில் தாமிரச் சற்று கலந்திருக்கின்றது என்று கூறுதலும் உண்டு. மாந்தர் பலர் இதனைப்பெரியாறு என்றும் வழங்குகின்றனர். திருநெல்வேலி ஜில்லாவில் வாழ்பவர் இவ்வாற்றுநீரைப் பெரியாற்றுத்தண்ணீர் என்று புகழ்ந்து கூறுகின்றனர்" என்று தமது கட்டுரையை ரெட்டியார் முடித்துள்ளார்.

இதை வாசித்த எனக்குப் பல சந்தேகங்கள் எழுந்தன. அவற்றை குரு முனிவரிடம் கூறினேன். அவர் சொன்னதை யெல்லாம் இங்கு சுருங்கக் கூறுவேன்.

காவேரியிலே பொன் காணப்படுவதுபோல பொருநையிலே தாமிர லத்து காணப்பட்டதால் தாமிர பர்ணி என்று இதற்குப் பெயர் ஆயிற்று. தண்பொருநை எவ்வாறு தாமிர வருணி என்று மாற இயலும்? மேலும், பண்டைக்கிரேக்கர் இந்நாட்டினை "தாம்ர பன்னி" என்று கூறியுள்ளதை நீ அறிவாயே. பொருநை என்னும் சொல் "பர்ணி, பர்ணு" என்ற வட சொல்லின் திரிபேயாம். யமுனை என்பது எவ்வாறு தமிழிலே "தொழுனை" என்று ஆயிற்று?. அது போலவே இதுவும்; ஆரியமும் தமிழ் நாட்டிலே தமிழுடன் ஆதி முதல் வழங்கப் பட்ட மொழியேயாம். இதை வேறொரு சந்தர்ப்பத்திலே விளங்கக்கூறுகின்றேன். பொருநை என்பது வடமொழியிலும் பிரசித்தி பெற்றது. ஸ்ரீபாகவதத்திலே "கலியிலன்றோ நாராயணபாராயணர்கள் தாமிரபர்ணி நதிக் கரையிலே தோன்றுவர்" என்று கூறப்பட்டுள்ளதை நீ அறிவாயே. இவ்வாறு கொண்டாடப்பெற்றவர் நம் சடகோபமுனிவர். இவருடைய பாசுரங்களிலே இந்நதி "பொருநல்" என்று கூறப்படுகின்றது. "மொய்புனற் பொருநல் முகில் வண்ணத்து நீர்ச் சேர்ப்பன்" என்று "பொருநல் சங்கணிதுறைவன்" என்றும் "வியன்புனற் பொருநல்" என்றும் இப்பாடல்களிலே கூறப்படும் நதி இதுவே. இதன் பெருமை யாது எனில், இது கடலிலே சேரும் இடத்திலே தான் நன் முத்துக்கள் கிடைக்கின்றன; நற்சங்கங்களும் கிடைக்கின்றன; இந்நதி "நோக்கும் பக்கம் எல்லாம் கரும்போடு செந்நெல் ஓங்கு செந்தாமரை வாய்க்கும்" என்றார் நம் கோபர். நாமும் இந்நதியின் பெருமையை நினைந்தே இதன் உத்பத்தி ஸ்தானமாகிய இப்பொதிய மலையிலே அமர்ந்தோம்".

இவ்வாறு என் குருநாதர் கூறவே, "இதுபற்றியேயோ இந்நதி பெரியாறு என்னும் பெயர் பெற்றது. இதனிலும் பெரியதாகவுள்ள நதியை இதன் உபநதியாகச் சிற்றாறு எனக்கொண்டதும் இக்காரணம் பற்றியேபோலும். என்னே, இக்குரு முனிவரின் பெருமை!" என்று வியப்புறுகிறேன்.

(* முதற் புஸ்தகம்; இரண்டாம் புஸ்தகம்; இவை ஸ்ரீமான். வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களால் தொகுக்கப்பட்டன; பதிப்பித்தோர். மாடர்ன் பப்ளிஷிங் ஹௌஸ் திருவல்லிக்கேணி, மதராஸ். 1931. விலை. (1). 7 அணா (2) எட்டு அணா).

# ரேகை சாஸ்திரம்.

(சக்திதாஸன் எழுதியது)



(சென்ற வாரத் தொடர்ச்சி.)

"விதிரேகையும் இரண்டு துண்டாயிருப்பதால் பயங்கரமான பல இடுக்கண்களுக்குட்பட்டு, அன்பும் ஆதரவுமான பலரை இழக்க நேர்ந்திருக்க வேண்டுமென்று சொல்வதானும், பெருத்தலாபம்—அதிர்ஷ்டம்—உண்டாயிருக்க வேண்டும் என்றும் சொல்ல வேண்டும்" என்றார்.

"ஆச்சர்யம்!— அவ்வளவும் உண்மையே" என்றாள்.

"கடைசியாக உனது மூன்றாவது குழந்தை கர்ப்பத்திலிருக்கும்போது அதாவது இரண்டு வருஷங்களுக்கு முன் மிகுந்த கஷ்டத்திலிருந்து தப்பி இருக்க வேண்டும்" என்றார்.

வாஸ்தவமே என்று தலையை அசைத்தாள். இப்பொழுது எவ்வித கஷ்டமும் நேராது. நாற்பத்தைந்து வயது வரை சுகமே. அதன் பிறகு ஜலத்தினால் ஓர் அபாயமிருக்கிறது. அதைத்தாண்டிவிட்டால் ஆயுஸ் ரேகைக்கு மிகுந்த செல்வாக்கு உண்டாகிறது. கங்கண ரேகையும் ஒத்திருக்கிறது. நல்ல சுகவாழ்வும் தீர்க்காயுளுமுண்டு. உன் கை யுத்த வீரனுடையது போல அமைந்திருக்கிறது. தேகாப்பியாசத்தால் வஜ்ர சரீரமாயிருக்கிறது. காரணங்கண்டு நடப்பது அபூர்வம். பார்த்த சமயத்தில் புத்திக்கு எதுயுக்தமெனப்படுகிறதோ அதை உடனே செய்துவருவது வழக்கமாயிருக்கிறது" என்றார். இவ்விதம் அப்பெண்மணிக்கு ரேகை பார்த்துவிட்டு, எல்லோரும் போஜனத்துக்குச் சென்றோம். மகான் தேசபொரலியும் கூடவந்திருந்தார். அவரும் அந்த ஸ்திரீயின் கையைப் பார்த்துப் பொதுவாக அவரது சிஷ்யையைப் போலவே சொல்லி முடித்தார்.

## கை ரேகையைப் பரீக்ஷிக்க வேண்டிய வழி.

ஒருவர் கையைப் பார்த்து பலா பலன்களைச் சொல்லுமுன் கவனிக்க வேண்டிய விபரங்கள் பலவுள. முதலாவது கையைத் தொடாமல் இயற்கை (சுபாவ) அமைப்பில் வைத்துப் பார்க்கவேண்டும். சில ரேகை சாஸ்திரிகள் கையைப் பிடித்து பரீக்ஷிக்கிற ரேகையை விரலினால் அழுத்தியும் பார்க்கச் சொல்லுகின்றனர். பெரும்பான்மையோர் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. கையைத் தொடாமல் பரீக்ஷிப்பதே நலமாகும். கையில் ஒரு துரும்பு அல்லது பென்சிலைக்கொண்டு ரேகைகளைப் பார்க்கலாம்.

ஹஸ்தலக்ஷண சாஸ்திரம் ஹஸ்த ரேகை சாஸ்திரமென இரண்டு பிரிவுகளிருக்கின்றன. முந்தியது கையின் அமைப்பு, விரல்களின் அமைப்பு இவைகளை விளக்குவதாகும். இரண்டாவதோ உள்ளங்கையிலும், அதனைச் சுற்றிலுமுள்ள ரேகைகளையும் குறிகளையும், பூர்வ, தற்கால, வருங்கால விஷயங்களை அறிவிப்பதாகும். ஆகையினாலே இரண்டு கைகளின் அமைப்பைக் கவனித்து, இரேகைகளின் அபிவிர்த்தியையும் புத்தி ரேகையைக் கொண்டு மனோபாவத்தையும் அறிய வேண்டும். பலனை அறிய விரும்புவோரில் சிலர் ரேகை விபரம் கேட்கமாட்டார்கள். எனவே அத்தகையோரிடம் அதைப்பற்றிப் பேச வேண்டியதில்லை.

பலனைச் சொல்ல ஆரம்பிக்குமுன் வயதைக் கேட்டறிந்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். சென்ற காலத்தில் நடந்த சம்பவங்களைசீர்தூக்கி, நிகழ்காலத்தை உணர்த்த வேண்டும். சிலர் குறிப்பிட்டுக் கேட்கும் விவகாரத்துக்கு மாத்திரம் பலன் சொல்ல வேண்டும். பொதுவாய் சகல பலன்களை விரும்புவரேல் நிதானமும் பொறுமையும் வேண்டும். தன் கையை நன்றாய் ஆராய்ந்து, மற்றவர் கைகளையும் ஆராய்ச்சி செய்து தெளிந்திருந்தாலொழிய பலா பலன்களைச் சொல்ல முற்படுவது பயனற்றதாகும். இரண்டு கைகளிலுள்ள ரேகைகளைப் பார்த்து அபிவிர்த்தியை முக்கியமாய்க் கவனித்து, ஆயுள் புத்தி இருதய நிலைமைகளையும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். குரு சூரியன், சந்திரன், சுக்கிரன் இந்த நான்கு மேடுகளும் பலா பலன்களைச் சொல்வதற்கு மிக்க அனுகூலமாகும். அமெரிக்காவில் ரேகை சாஸ்திர சங்கத்தின் தலைவர் சமீபத்தில் வெளியிட்ட நூலிலும் மேற்சொல்லிய நான்கு மேடுகளை பிரதானமாய்க் கவனிக்கத் தக்கதென சொல்லியிருக்கின்றனர். ஆயுள் பாகத்தை அவசரப்பட்டு சொல்லிவிடக்கூடாது. ஆனால் அதில் குறுக்கிட்ட காலத்திய சம்பவங்களைச் சொல்லலாம். புத்தி ரேகை மனோ நிலை, சாதுர்யம், யுக்தி சாதனம் இவைகளைக் குறிப்பதால் அதை அடுத்தபடியாகத் தெரிந்து சொல்ல வேண்டும். ஆரோக்கியத்தைப்பற்றி வினவினாலன்றி நோய் நொடிகளைப் பற்றிச் சொல்லவேண்டுவதில்லை. எமது அனுபவத்தில் அவசரமாய்த் தெரிந்து கொள்ள வருபவர்களே அதிகமாயிருக்கின்றனர். அதிலும் அதிர்ஷ்டத்தை மாத்திரம் கேட்க விரும்புகின்றனர். வெளிநாடுகளில் ரேகை பார்த்துக் கொள்கிறவர்கள் முதலாவது வருங்காலத்தில் சம்பவிக்கக் கூடிய கெடுதிகளைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகே நற்பலனைக் கேட்கின்றனர். அதற்கான வழிகளில் திரிந்துக் கொள்கின்றனர். ஒரு பிரசித்தி பெற்றவரின் குமாரன் உத்தியோக நிமித்தம் அநேக சிபார்சுடன் சென்னையில் காத்திருந்தார். அவருக்கு உதவி செய்வதற்காக பிரபல ஜமீன்தார்களும் பிரபுக்களும் வந்திருந்தனர். அதில் ஒரு ஜோஸ்யருமிருந்தார். அவர் ஜாதகத்தைப் பார்த்து இரண்டு நாட்களுக்குள் மணிக்கணக்குடன் உத்தியோகத்துக்கு உத்திரவு கிடைக்குங் காலத்தைக் குறிப்பிட்டிருந்தார். தற்செயலாய் நானும் அவ்விடத்திற்குப் போகநேர்ந்தது. அக்கூட்டத்தில் ஒருவர் என்னை அழைத்து உத்தியோக நிமித்தம் வந்திருப்பவர் கைரேகையைப் பார்க்கச் சொன்னார். அவ்விதமே கையைப் பார்த்து வயதைக் கேட்டறிந்து, 'உத்தியோகத்துக்கு இன்னும் ஆறுமாதம் அல்லது ஒரு வருடம் செல்ல வேண்டியதாயிருக்கிறது. ஆனால் அவருக்கு உத்தியோகத்தில் தற்காலம் விருப்பம் சற்றுமில்லாதிருக்கவேண்டும். மற்றவர்களின் தூண்டுகோலுக்குட்பட்டே முயற்சிக்கு உடன்பட்டிருக்கிறதாய்ச் சொன்னேன். கடைசியாக எதிர்பார்த்திருந்தபடி உத்தியோகம், கைக்கெட்டியது வாய்க் கெட்டாத நிலைமையில் மாறிவிட்டது. வாசகர்களுக்கு ரேகையைப் பற்றி விவரித்துக் கூறுகின்றேன். அந்த வாலிபரின் கையில் விதி ரேகை காலந்தள்ளி உற்பத்தியாயிருக்கிறது. அவரது வயதையும் விதி ரேகையின் உற்பத்தியாயிருக்கிற காலத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது சுமார் ஒரு வருடத்துக்குப் பிறகே விதியின் பலனுண்டாகும் என்பதாகிறது. புத்திரேகை சந்திர மேட்டில் வளைந்திருந்தபடியால், இவர் மற்றவர் வேண்டுகோளுக்கிணங்கியவரானார் என்பதாயிற்று.

வெளியூரில் ஒரு சமயம் தங்கியிருந்த போது, ஒரு விருத்தர் தமது நிலைமையைக் கேட்டறிந்து சென்றார். அப்பொழுதுதான் வெளியூரிலிருந்து வந்தவர் எனது அறைக்கு வந்து, 'தங்களுக்கு ரேகை சாஸ்திரம் பரிசயம் இருக்கிறதாய்த் தெரிகிறது. தயவுசெய்து என்கையைப் பார்த்து எனது அதிர்ஷ்ட நிலைமையைச் சொல்லவேண்டு'மென்றார். அது சமயம் நான் ஸ்நானத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தபடியாலும், அவரது சொல்லைத் தட்ட முடியாமல், உடனே வயதைக் கேட்டறிந்து முக்கியமான ஒரு சம்பவத்தைச் சொல்லி, மற்றவைகளைச் சாவதானமாய் அறிவிப்பதாய்ச் சொன்னேன். அதாவது இவருடைய விதி ரேகை 27 வயதில் இரண்டு துண்டாக மற்றொரு ரேகையால் வெட்டப்பட்டிருந்தும், எஞ்சி நின்ற ரேகை வளர்ந்துமிருந்தது. 'நீங்கள்கௌரவமாயும் சந்துஷ்டியோடும் வாழ்ந்து வரும்போது சுமார் இருபத்தேழாம் வயதில் ஒரு தொழிலை விட்டு, குளத்திலிருந்து குட்டையில் குதித்ததுபோல், வேறு தொழிலில் மாறியிருக்கிறீர்கள்' என்றேன். அவர் சற்றே யோசனை செய்து "வாஸ்தவம், அதினால்தான் கஷ்டத்தை அனுபவிக்கிறேன்" என்றார். பிறகு அவர் சேலத்தில் பிரபல வக்கீலாயிருந்தாரென்றும், ஒத்துழையாமை இயக்கத்தில் கட்டுப்பட்டு வக்கீல் தொழிலை விட்டு, சுதேசித் தொழிற்சாலை நடத்திவருகிறதாயும் தெரிவித்தார். இப்பொழுது விதிரேகையில் ஏற்பட்ட மாறுதல் நன்கு விளங்கும்.

நமது தொடர் கதை

# உமாவின் உள்ளன்பு

(ஸ்ரீமான் பி. எம். ராமசர்மா எழுதியது.)

(சென்ற வாரத் தொடர்ச்சி)

[வெளியான பாகத்தின் சுருக்கம்:—இளம்பிராயத்தில் தாயை யிழந்து ஒரு பிரஞ்சுக் கன்யாமடத்தில் உமா வசித்து வந்தாள். 17-வது வயதில் கன்யா மடத்தை விட்டுத் தன் தந்தையுடன் வசிக்கையில் அவளுடைய அழகையும் புத்தி கூர்மையையும் கண்டு வியந்த அவ்வூர் ஸப்கலெக்டர் ஸுந்திரராவ் அவளை மணந்தார். அன்யோன்யமாக வஸித்து வந்த ஸதிபதிகளுக்கு திடீரென்று ஸங்கீத சம்பந்தமாக மனஸ்தாபம் உண்டாயிற்று. இந்த வேற்றுமை மாறுபடாமலே இருந்து வந்தது. ஒரு நாள் ஸுந்திரராவ் தன் தாயாரிடமிருந்து வந்த கடிதத்தை உமாவிடம் படித்துக் காண்பிக்கக் கூப்பிட்டான்.]

அத்தியாயம் 7.

"உமா இதோ பார். அம்மா நீண்டகடிதம் எழுதியிருக்கின்ருள். அப்பாவுக்கு, அடுத்த புதன்கிழமை சஷ்டியப்த பூர்த்திசெய்ய வேண்டுமாம். நான் கவனிக்காமலேயே இதுவரையிலிருந்து விட்டேன். இன்று மத்தியான வண்டியிலேயே ஆர்டர்லிகளிலொருவனை பாண்டியனூருக்கு அனுப்பி அப்பாவையும், அம்மாவையும், கையோடு இங்கு அழைத்துக் கொண்டுவர ஏற்பாடு செய்யப்போகின்றேன். அவர்களிருவரும் உன்னைப்பார்க்க எவ்வளவோ ஆசையுள்ளவர்களாக இருப்பார்களென்பதில் சந்தேகமில்லை. அப்பா சஷ்டியப்த பூர்த்தியை இங்கேயே அடுத்த புதன்கிழமை சிறப்பாகக் கொண்டாடுவோம். நாராயணனிடம் சொல்லவேண்டிய ஸாமான்களை யெல்லாம் தயார்படுத்தச்சொல்லிவிடு. நாளை சாயந்திரமே அவர்கள் இங்கு வந்து விடுவார்கள்" என்று கூறி உமாவின் முகத்தை நோக்கினன்.

உமா பெற்றோர்களின் பிரேமை எத்தன்மைய தென்பதையே அறியாதவள். பிறந்த பதினைந்தாம் நாளில் தாயை இழந்தாள். தந்தையின் அன்பை, தனக்கு பிராயம் வந்த பிறகு அறிந்து கொண்டவளே யொழிய, தூக்கி எடுத்து வாரித் தழுவி சீராட்டிப்பாராட்டும் பிராயத்தில், கன்யாமடத்தில், வேற்று மனிதர் மத்தியில் வாழ்ந்து வளர்ந்து வரவேண்டியவளானள். எனவே, பெற்றோர்களின் வாஞ்சை எத்தன்மையதென்பதை அனுபவத்தில் கண்டு உணராதவளாதலால் "என்னை தங்களுடைய பெற்றோர்கள் ஒரு போதும் கண்ணால் பார்த்தவர்களல்லவே. அவர்கள் எப்படி என்னை நேசிக்கக்கூடும்?" என்று ஐயத்துடன் வினவினள்.

ஸுந்தரராவ், ஒரு விதத்தில் வியப்பும் விசனமுமடைந்தவனாய், "உமா! உனக்கு ஒன்றும் தெரியாது. இன்னும் நீ குழந்தையாகவே இருக்கின்ருய். என்னை ஒரு மாதம் பார்க்காமற் போனல் என்னுடைய அப்பாவும் அம்மாவும் சரியாகச் சாப்பிடமாட்டார்கள். அவர்களுக்கு என்னிடத்திலுள்ள பிரேமையை அளவிட்டுச் சொல்லவும் முடியுமா? எனக்கு உன்னைப்போல் ஒரு கண்மணியைத் தேடி விவாகம் செய்து வைக்க வேண்டுமென்று நினைத்து, எவ்வளவு பாடுபட்டிருக்கின்ருர்களென்பது உனக்குத் தெரியுமா? இப்பொழுது நானகவே, உன்னைத் தேடியடைந்திருப்பதால் அவர்களுக்கு இன்னும் அதிகச் சந்தோஷமே யுண்டாகும். என்னிடத்தில் அவர்களுக்குள்ள அன்பின்மேலீட்டினல், உன்னையும் எனது உயிரில் ஒரு அங்கமாகக் கருதி நேசிப்பார்கள். அப்படி இப்பொழுதே நேசிக்கின்ருர்களென்பதைத் தெரிந்துகொள்" என்று பேரன்பு பெருகக் கூறினன்.

உமா மௌனமாக இருந்தாள்.

ஸுந்தரராவ் தனது ஆர்டர்லியைக் கூப்பிட்டு, கைப்பெட்டியைக் கொண்டுவரச் சொல்லி, தனது தகப்பனருக்கு, உடனே தலைச்சேரிக்குப் புறப்பட்டு வருமாறு வேண்டிக்கொண்டு ஒரு கடிதம் எழுதி, ஆர்டர்லியிடம் கொடுத்து, பெற்ருேர்களின் பிரயாணச் செலவுக்கு ஒரு நூறுரூபாய் நோட்டையும் அவனிடம் கொடுத்து உடனே பாண்டியனூருக்குப் புறப்படும்படி உத்தரவிட்டான். "நீ இன்று பகல் 1-மணிக்குப் புறப்படும் வண்டியில் ஏறினல், இரவு 10-மணிக்குப் பாண்டியனூர் போய்ச்சேரலாம். காலை 8-மணிக்கே, அம்மாவையும், பெரியவரையும் அழைத்துக்கொண்டு மாலை 5 மணிக்கு வந்து சேர்ந்துவிடு. நான் ரெயில்வேஸ்டேஷனில், எல்லோரையும் எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருப்பேன். தெரியுமா? புறப்படு உடனே" என்று ஆர்டலிக்கு உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டு உமாவை நோக்கி "உமா நாளை சாயந்திரம் 5 மணிக்கு நாமிருவரும் ரெயில்வேஸ்டேஷனுக்கு, அப்பாவையும் அம்மாவையும் வரவேற்கச் செல்வோம். நீ வேறு வேலை வைத்துக்கொள்ளாதே" என்று சொல்லிவிட்டுஸ்நானத்திற்கு எழுந்து சென்றுவிட்டான். உமாவும் தனது அறைக்குள் சென்ருள்.



ஸுந்திரராவ் ரயிலில் வந்திறங்கின தன்தாய் தந்தையரை வீட்டிற்கு அழைத்துச் சென்ருன்.

அத்தியாயம் 8

அடுத்த நாள் மாலை நான்கு மணிக்கே ஸுந்தரராவ் தனது ஆபீஸ் வேலைகளை முடித்துக் கொண்டு தனது பெற்ருேர்களை ரெயில்வே ஸ்டேஷனில் வரவேற்கச் செல்ல உமாவையும் அழைத்துக் கொண்டு போக எண்ணி, வீட்டிற்கு வந்தான். தானே ஓட்டிக் கொண்டு வந்த மோட்டாரை வாயிலிலேயே நிறுத்திக்கொண்டு, உமாவின் கவனத்தைக் கவருவதற்காக, இரண்டு மூன்று முறை மோட்டாரிலிருந்தபடியே 'ஹாரன்' செய்தான். உமா வரவில்லை. மீண்டும் ஒரு முறை பலமாக 'ஹாரன்' செய்துவிட்டு வண்டியைவிட்டு இறங்க முயற்சிக்கையில், சமயற்கார நாராயணன் வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்தான். "அம்மாள் உள்ளே இல்லையா?" என்று ஸுந்தரராவ் அவனை வினவினன். "இப்பொழுதுதான் சற்று நேரத்திற்கு முன்னதாக, அம்மாள் வெளியே சென்ருர்கள்" என்று பதிலளித்தான் நாராயணன்.

தான் முன்னமேயே சொல்லியிருந்தும், உமா, வேறு எங்கேயோ புறப்பட்டுப் போய்விட்டதற்காக, ஸுந்தரராவ் முதலில் சிறிது கோபமடைந்தானயினும், ஒரு சமயம் உமா, தன்னுடைய வரவை எதிர்பார்த்து காத்திராமல், ஸ்டேஷனில் சந்தித்துக்கொள்ளலாமென்று நினைத்து அவள் ஸ்டேஷனுக்குச் சென்றிருக்கக்கூடுமென்று எண்ணி, மனதை சாந்தப்படுத்திக்கொண்டு மீண்டும் மோட்டாரைத் திருப்பிக்கொண்டு ரெயில்வே ஸ்டேஷனை நோக்கி நடத்திச் சென்ருன்.

முதலாவது இரண்டாவது வகுப்பு ரெயில்வே பிரயாணிகள் பிளாட்பாரத்திலிருந்து வரக்கூடிய வாயிலுக்கெதிரில் மோட்டாரை நிறுத்திவிட்டு, இறங்கி பிளாட்பாரத்திற்குள் செல்லும்போதே வழியில் நின்றுகொண்டிருந்த டிக்கட் பரிசோதகனை "அம்மாள் இங்கு வந்தார்களா?" என்று ஸுந்தரராவ் வினவினன். "நான் பார்க்கவில்லிங்களே" என்று டிக்கட் பரிசோதகன் பதிலளித்தானயினும், அந்தப் பதிலை எதிர்பார்த்து ஸுந்தரராவ் நிற்கவில்லை. பிளாட்பாரத்தில் ஒரு கோடியிலிருந்து மற்ருெரு கோடிவரையில் உமாவைத் தேடிப்பார்த்தான். உமா காணப்படவில்லை. உமா வகுப்புப் பிராயாணிகளுக்கான "வெயிடிங் ரூமில்" உட்கார்ந்திருக்கக் கூடுமென்று எண்ணி அங்கு சென்று பார்த்தான். உமாவைக் காணவில்லை. சலிப்

புற்ற மனத்தினனாய் "இவள் என்ன பெண்! எங்கு சென்றுவிட்டாள், இவளைத் தேடவதே பெரிய எழவாய்விட்டதே" என்று மனதிற்குள்ளேயே சொல்லிக்கொண்டிருக்கையில் வண்டித் தொடரும் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. எதிர்பார்த்தபடியே, தனது தாயும் தந்தையும் அவ்வண்டித்தொடரில் வந்து இறங்கக்கண்டு, அவர்களை அழைத்துக்கொண்டு நேரே வீடுவந்து சேர்ந்தான்.

அத்தியாயம் 9

மோட்டாரைவிட்டு இறங்கியதும் தர்மாபாய் தனது மருமகளைப் பார்க்க ஆவலுள்ளவளாய் நேரே வீட்டிற்குள் சென்றாள். தனது அருமைத் தாய்க்குத் தானாகத் தேடி மணந்த தனது மனையாளை அறிமுகம் செய்துவைக்க வேண்டுமென்ற ஆவலுடன் ஸுந்தரராவும் உடன் சென்றான். வயோதிகரான விஜயேந்தர ராவ், வீட்டுத் தாழ்வாரத்திலேயே போடப்பட்டிருந்த பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு தாம் கொண்டுவந்த மூட்டை முடிச்சுகள், மோட்டரிலிருந்து சரிவர இறக்கப்பட்டு வீட்டிற்குள் கொண்டுவந்து சேர்க்கப்படுகின்றனவா என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

உள்ளேசென்ற தர்மாபாயும் ஸுந்தரராவும் உமாவின் அறைக்குள் சென்று பார்த்தார்கள். அறை காலியாக இருந்தது. "நீங்கள் வருவீர்களென்பது அவளுக்குத் தெரியும். ஆகையால், சமையலைக் காலத்தில் முடித்துவைப்பதற்காகச் சமையலறைக்குள் வேலை பார்த்துக் கொண்டிருக்கக்கூடும்" என்று சொல்லிக் கொண்டே, ஸுந்தரராவ் தனது தாயாரைச் சமையலறைக்குள் அழைத்துச் சென்றான். அங்கு நாராயணன் மட்டும் இருந்ததைக் கண்டு, "இன்னும் அம்மாள் திரும்பி வரவில்லையா?" என்று ஆத்திரத்துடன் வினவினான். மாலை 4 மணி சுமாருக்கு உமா, தோட்டத்தை நோக்கிச் சென்றதைக் கண்டதாகவும், பிறகு வீட்டிற்குள் வந்ததாகத் தனக்குத் தெரியவில்லையென்றும் நாராயணன் பதிலளித்தான்.

அத்தியாயம் 10

ஸுந்தரராவுக்குப் பலவிதமான எண்ணங்கள் மனதில் தோன்றலுற்றன. உமா வந்தவுடன் அவளைப் பலமாகக் கண்டிக்க வேண்டுமென்று மனதிற்குள் திட்டம் போட்டுக்கொண்டான். ஆனால் தனது கோபத்தை வெளிப்படக் காட்டிக் கொள்ளாமலேயே, "உமா ஸ்டேஷனுக்குக் கூட, என்னுடன் வருவதாகச் சொல்லியிருந்தாள். வேறு ஏதோ அவசர காரியத்தை முன்னிட்டு வெளியே போயிருக்கிறாள் போல் தோன்றுகிறது ஒரு சமயம் தான் புதிதாகப் பார்க்கும் மாமன் மாமியாரை வெறுங்கையுடன் சென்று பார்க்கலாகாதென்று நினைத்து ஏதாவது வாங்கிக் கொண்டு வரச் சென்றிருக்கக்கூடும். எப்படியும் இரண்டொரு நிமிஷத்தில் வந்து விடுவாள். நாம் ஏன் இந்தப்புகையில் நிற்கவேண்டும்? கூடத்தில் சென்று உட்கார்ந்து கொள்வோம். வா" என்று கூறி, தன் தாயை அழைத்துக்கொண்டு சென்றான். போகும் போதே தர்மாபாய், தனது பையனுக்கு, காதல் விவாகத்தால் விளையக் கூடிய கெடுதல்களைப் பற்றிச் சுட்டிச் சில வார்த்தைகளைக் கூறத் தவறவில்லை.

"எவ்வளவு படிச்சிருந்தாலும், அழகு இருந்தாலும் குடித்தனப்பாடு தெரிந்திருக்கிற பெண்ணுக்கு ஸமானமே இல்லை. உன் ஆம்படையாளுக்கு அதைச் சொல்லிக் கொடுக்க யாருமே இல்லை போல் தோன்றுகின்றது" என்று கூறி உமாவிடம் காணப்படும் குறையை ஸுந்தரராவுக்கு எடுத்துக் காட்டினாள். தர்மபாயின் சொற்கள், அவனது செவிகளில் விழுந்தன வாயினும், அவன் மனம், உமாவின் உபேக்ஷையான நடத்தையின் மீது சென்று ஓரளவு ஆத்திரத்தை உண்டுபண்ணியிருந்தமையால், அவன் எவ்வித பதிலும் அளிக்காமல், கூடத்தில் பொறுமையற்ற மனத்தினனாய் நடமாடிக்கொண்டு வாயிலை நோக்கி, உமாவின் வருகையை எதிர் பார்த்த வண்ணமாயிருந்தான்.

ஸுந்தரராவ் அதிக நேரம் இந்த நிலைமையிலிருந்து வர நேரவில்லை. உமா கையில் ஒரு புத்தகத்துடன், பங்களாவின் வாயிலண்டைவருவதைக் கண்டான். அவளை உறக்கக் கூவியழைத்து, தனது தாயின் எதிரிலேயே கண்டிக்க எண்ணினான். மெலிந்த சரீரமும், அவளது அழகிய முகத்தில் காணப்பட்ட ஓர் வித வாட்டக் குறியும் ஸுந்தரராவுக்கு உண்டாயிருந்த உத்வேகத்தை அடக்கின. எனவே, உமா வருவதைக்கண்டவுடன் அவன், தனது முகத்தை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டான். உமா பங்களாவின் தாழ்வாரத்தில் பெரியவரொருவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டவுடன், அவரே தனது மாமனாராக இருக்க வேண்டுமென்று நிச்சயித்து அவரைக்கண்டு வார்த்தையாட நாணமடைந்தவளாய். பங்களாவின் முன் வாயிலின் வழியாக உள்ளே செல்லச் சங்கோஜப்பட்டு, வாயிலுக்கெதிரில் வட்டமாய் அடர்ந்து வளர்ந்திருந்த, பூஞ் செடிகளைச் சுற்றிக் கொண்டு, பங்களாவின் பின்பக்கம் சென்று, அங்குள்ள தனி வாயிலின் வழியே, தனது அறைக்குள் புகுந்து, ஒரு ஸோபாவில் அமர்ந்து கையிலிருந்த புத்தகத்தை நோக்கிய வண்ணமாக இருந்தாள்.



"இப்படிச் செய்வாயானால் வீணே கெட்டுப்போவாய்" என்று எச்சரித்துவிட்டு சுந்தராராவ் வெளியேறினான்.

"இவள் ஏன் என்னைப் பார்க்கவும்வெட்கப்பட்டுப்பின்புற வாயில் வழியாக அறைக்குள் செல்ல வேண்டும்? அவளுடைய குற்றம் நிறைந்த மனதே அவளை வெட்கப்படும்படிச் செய்கின்றது போல் தோன்றுகின்றது. இனி மேல் சும்மா இருக்கக்கூடாது!" என்று ஸுந்தரராவ் தனக்குள் சொல்லிக் கொண்டான். உடனே கோபத்துடன் உமா இருந்த அறைக்குள் சென்று அவளெதிரில் நின்று கொண்டு, கடுகடுத்தமுகத்துடன் அவளை உற்று நோக்கினான். உமா தலையை நிமிர்ந்து தனது கணவனுருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்து விட்டு மீண்டும் தலையைக் குனிந்து கொண்டு, கையிலுள்ள புத்தகத்தைப் படிப்பதில் ஆழ்ந்த கவனம் செலுத்துபவள் போல் பாசாங்கு செய்தாள். ஸுந்தரராவ், தனது இடது கையால், புத்தகத்தை நோக்கிக்கொண்டிருந்த உமாவின் தலையை நிமிர்த்தி தனது முகத்தைப் பார்க்கும்படிச் செய்து, "உமா நீ புத்தியில்லாத் தனத்தினால், இப்படிச் செய்கிறாயா? அல்லது அலக்ஷிய புத்தியினால், இப்படி நடந்து கொள்கிறாயா? என்பது தெரியவில்லை. அப்பாவும், அம்மாவும், வருகின்றார்களென்று நான் உனக்குச் சொல்லியிருக்கவில்லையா? நீ அவர்களை வரவேற்க வீட்டில் கூடத் தங்காமல் எங்கு சென்றிருந்தாயென்பது எனக்குத் தெரியவேண்டும்!" என்று கண்டிப்புடன் வினவினான். உமா வாயைத்திறக்கவில்லை. அவளுடைய கம்பீரமான முகத்தில் வண்டுகள் போன்று பிரகாசித்துக்கொண்டிருந்த கரிய கண்கள் சிவக்கலுற்றன. நீர் ததும்பத் தொடங்கிற்று. ஸுந்தரராவ், அதைப்பார்த்துச் சகிக்கச் சக்தியற்றவனானான். "இப்படியெல்லாம் இனிமேலும் நடந்து வருவாயானால், வீணே கெட்டுப்போவாய்" என்பதை நான் இப்போழுதே உனக்கு எச்சரிக்கை செய்கின்றேன்" என்று கூறிவிட்டு அறையிலிருந்து வெளிவந்துவிட்டான்.

(தொடரும்.)

## இந்திய வர்த்தமானம்.

(6-ம் பக்கம் தொடர்ச்சி.)

வரை அவர்களைத் தூக்கிலிடாமல் வைத்திருக்க வேண்டுமென்று செய்து கொண்டிருந்த மனுவை ஜஸ்டிஸ் பிதே ஹைக்கோர்ட் 561 ஏ பிரிவுப்படி தலையிட முடியாதென்று காரணஞ் சொல்லித் தள்ளி விட்டார்.

பஞ்சாப் சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் துப்பாக்கிப் பிரயோகம் செய்த வழக்கில் மரண தண்டனை விதிக்கப்பட்ட ஸ்ரீமான் ஹரிகிஷன் உண்ணாவிரத மிருப்பதாகக் கூறப்படுகிறது. இதனால் ஹரிகிஷனை பகத்சிங்பேட்டிகாண ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மார்ச் 24ந் தேதி ஹரிகிஷன் தூக்கிலிடப்படுவதாக ஒரு வதந்தி உலாவுகிறது. ஆனால் இது ஊர்ஜிதமாகவில்லை.

---

### தென்னிந்தியா ரயில்வே மின்சார வண்டிகள்.

தாம்பரம் ஸ்டேஷனிலிருந்து பீச் ஸ்டேஷன் வரையில் மின்சார சக்தியால் ரயில் வண்டிகளை ஓட விடுவதற்காக ரயில்வே அதிகாரிகள் செய்து வரும் வேலைகள் தாம்பரத்திலிருந்து எழும்பூர் வரையில் முடிந்து விட்டன. வருகிற மாதம் மே. த. கவர்னர் இதைத் திறந்துவைப்பார். ஆனால் வண்டிகள் மே மாதம் முதற் கொண்டுதான் ஓட ஆரம்பிக்கும்.

---

### சணல் ஆலை மூடப்பட்டது.

கல்கத்தாவில் டெல்டா நாஷனல் மில்லும், பெல்வெடீர் மில்லும் மூடப்பட்டு விட்டதன் பலனாக 1300 பெயர்கள் வேலையற்றவர்களாகி விட்டனர். மில்களிலிருந்து நீக்கப்பட்ட வேலைக்காரர்கள் சென்ற திங்களன்று, கட்டுப்பட்டு வேலைசெய்து கொண்டிருந்தவர்களைப் பயமுறுத்தி மில்கள் மீது கல்லெறிந்ததற்காக இப்படி மில்கள் மூடப்பட்டன. ஒருவாரம் அவை மூடியே கிடக்கும்.

---

### ஆமதாபாத் நெசவுத் தொழிலாளர் வேலைநிறுத்தம்.

9-ந்தேதி மார்ஸ்டன் மில் மனோகரம்மில் ஆகிய இடங்களிலுள்ள நெசவு இலாகா தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்து விட்டனர். சேதப்பட்டுப் போன ஆடைகளின் கிரயத்தை முதலாளிகள் தங்களிடமிருந்து வாங்குவதை அவர்கள் கண்டிக்கின்றனர். ஒரு வாரமாக பரோடாவில் நெசவாளிகளும் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். அவர்கள் சம்பளம் குறைவுபட்டதாகப் புகார் கூறுகிறார்கள்.

---

### பம்பாய் கவர்ன்மேண்டின் அறிக்கை

பம்பாய் கவர்ன்மெண்டார் பின் கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர்:— உணவுப் பொருள்களின் விலை திடீரெனக் குறைந்து விட்டதையும் அதனால் பொருளாதார நிலைமையில் ஏற்படக்கூடிய பாதகத்தை, முக்கியமாக விவசாயிகளுக்கு ஏற்படக்கூடிய பாதகத்தையும் முன்னிட்டு கவர்ன்மெண்டார் மாகாணத்திலெங்கும் 1 வருஷத் தீர்வைக்குமேல் எவருக்கும் வரியாக விதிக்கப்படக்கூடாது என்ற முடிவுக்கு வந்திருக்கின்றனர். இதனால் வசூலிக்காமல் நிறுத்திவைக்கப்பட்ட பாக்கிகளெல்லாம் மீண்டும் வசூலிக்கப்படாமல் நிறுத்தி வைக்கப்படவேண்டும். சில ஜில்லாக்களில் நிலவரி வசூல் அங்குள்ள விசேஷ நிலைமையை முன்னிட்டு ஒன்றல்லது இரண்டு வருஷங்களுக்கு நிறுத்தி வைக்கப்பட்டது ஞாபகமிருக்கலாம். சமீபத்தில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவின்படி வசூலிக்கப்பட வேண்டியவைகளும் சஸ்பெண்டு செய்யப்பட்டிருக்கின்றன. இந்த உத்தரவு சிந்து தேசத்திற்குச் செல்லாது. அது சம்பந்தமாகத் தனியாக உத்தரவு பிறப்பிக்கப்படும். ஏற்கெனவே செல்லான வரிப்பணங்கள் நடைமுதல் வருஷத்திற்கான வரிக்குச் செல்லுவைத்துக்கொண்டு பாக்கி யிருந்தால் திரும்பிக் கொடுக்கப்படும்.

கவர்ன்மெண்டார் ஒரு வருஷத்தில் விலை யிறங்குவதால் தீர்வையை திருத்தவோ அன்றி வஜாசெய்யவோ முடியாது. இப்படியிருப்பினும் தற்சமயம் நாடெங்கும் ஏற்பட்டுள்ள புதிய நிலைமைக்கு விவசாயிகள் தங்களைச் சரிப்படுத்திக்கொள்வதற்கு உதவிசெய்வதற்காக விசேஷ முறையாக எவருக்கும் ஒரு வருஷத் தீர்வைக்குமேல் விதிக்கக் கூடாதென்று தீர்மானித்திருக்கின்றனர்.

சித்தாப்பூர் தாலூகாவைச் சேர்ந்த சிலர் வட கன்னடம் கலெக்டருக்கும் கவர்னருக்கும்ராஜப் பிரதிநிதிக்கும் மகாத்மா காந்திக்கும் அடியிற்கண்ட தந்தியை அனுப்பியிருக்கிறார்கள்:-பொருளாதாரக் கஷ்டம் அதிகமாக இருப்பதால் விவசாயிகள் நிலவரி கொடுக்க முடியாதவர்களாக இருக்கின்றனர். போராட்ட நிறுத்த ஒப்பந்தத்தையும் கவனியாமல் அதிகாரிகள் நிர்ப்பந்த முறைகளைக் கையாண்டு வருகிறார்கள். இவற்றை விசாரணை நடத்திக் கஷ்ட நிவாரண மளிக்கவேண்டுமென வேண்டிக் கொள்ளுகிறோம்.

---

### திருச்சி அகில இந்திய கதர்க் காட்சி.

8-ந்தேதி யன்று திருச்சியில் அகில இந்திய கதர்க் காட்சி ஆசார்யா ஸர் பி. ஸி. ரேயால் திறந்துவைக்கப்பட்டது. காட்சி சாலையில் ஏராளமான கதர் விற்பனையாகி வருவதாக அறிகிறோம்.

---

### மாரியம்மன் உற்சவத்தில் தீ விபத்து.

சென்ற 5-ந்தேதி இரவு பழனியில் மாரியம்மன் உற்சவம் நடக்கையில் பந்தல் தீப்பற்றிக்கொண்டு மூவர் இறக்குமாறு நேரிட்டுப் பலர் காயமடைந்ததாகச் செய்தி வந்திருக்கிறது. மாரியம்மனுக்குத் திருப்தியை அளிப்பதற்காகப் பல கஷ்டமான பிரார்த்தனைகள் செய்து கொள்ளப்படுவது வழக்கம். அதில் தீச்சட்டியுடன் மேளத்திற்குத் தகுந்தபடி நடனம் செய்வதும் ஒன்று. ஒரு சட்டியில் எரியும் பொருள்கள் நிரம்பப் போடப்பட்டிருக்கும். பிரார்த்தனை செய்துகொண்டவர் ஒரு நாள் உபவாஸமிருந்துவிட்டுக் கையில் சட்டியை எடுத்துக்கொண்டு ஆடுவார். தீ இடையில் அணையாதபடி நெய், எண்ணெய் முதலியவை போடப்பட்டிருக்கும். இந்தச் சம்பவம் நடந்த தினத்தில் இந்த நடனம் தனியாகப் போடப்பட்ட பந்தலில் நடந்துகொண்டிருந்தது. ஆவேசம் வந்ததும் சட்டியைவைத்திருந்தவர் அதைத் தூக்கிப் போடவே கூரை பற்றிக்கொண்டதாகக் கூறப்படுகிறது. பந்தலின் இரு பக்கங்களிலும் கடைகளிருந்தன. பந்தலில் உள்ளவர்கள் ஓடிவிட்டபோதிலும் கடைக்காரர்கள் அதிகச் சேதமடைந்தனர். அவர்களில் இரண்டு மகமதியர்களும் ஒரு ஹிந்துவும் ஸ்தலத்திலேயே இறந்துவிட்டனர். பலர் காயமடைந்தனர்.

# வியாபாரப்பகுதி

## நாணய மாற்றம்.

| | | பென்ஸ். |
|---|---|---|
| லண்டன்மேல் | | |
| தந்தி விற்கிற விலை | 17. | 13/16 |
| தரிசன உண்டி விற்கிற விலை | 17. | 27-32 |
| தந்தி வாங்குகிற விலை | 17 | 27-32 |
| தரிசனஉண்டி வாங்குகிற விலை | 17. | 29/32 |
| 1-மாத தவணை ,, | 17. | 31/32 |
| 2-மாத தவணை ,, | 18. | 15/16 |
| 3-மாத தவணை ,, | 18. | 31/32 |
| 4-மாத தவணை ,, | 18. | 3/32 |
| 6-மாத தவணை ,, | 18. | 7 32 |

பிரான்ஸ் மேல் தரிசன உண்டி விற்பனை ரு. 100-க்கு பிராங்கு 900.

ஜர்மனி தரிசன உண்டி விற்பனை ரு. 100-க்கு மார்க்கு 148.

அமெரிக்கா தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரு. 279.

அமெரிக்கா தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரு. 274½.

ஸிங்கப்பூர் தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரு. 158.

ஸிங்கப்பூர் தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரு. 153.

ஹாங்காங் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரு. 75.

ஷாங்ஹாய் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டேயல் 100-க்கு ரு 90.

ஜப்பான் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை என் 100-க்கு ரு. 139

ஜப்பான் 2-மாத தவணை உண்டி வாங்குவது என் 100-ச்கு ரு. 134.

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை ரு. 100-க்கு கில்டர் 88.

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி வாங்குவது ரு. 100-க்கு கில்டர் 92.

பாரிஸில் லண்டன் மேல் தந்தி பவுன் 1-க்கு பிராங்கு 124.07

லண்டனில் அமெரிக்கா மேல் தந்தி பவுன் 1-க்கு டாலர் 4.85 25/32

இம்பீரியல் பாங்கு வட்டி 7%

பாங்க் ஆப் இங்கிலாந்து வட்டி 3%

---

## தங்கம், வெள்ளி.

| | ரு. | அ. | பை. |
|---|---|---|---|
| சவரன் | 13 | 8 | 9 |
| சீமை கட்டி தங்கம் தோலா 1-க்கு | 21 | 13 | 0 |
| ,, பம்பாய் கட்டி ,, | 21 | 3 | 0 |
| வெள்ளி ரு. 100 எடை | 44 | 12 | 0 |
| ரு. 1 எடை | 0 | 7 | 6 |

---

## சர்க்கார் கடன் பத்திரங்கள்

| | முதல் ரு. | அ. | பை. | வரை ரு. | அ. | பை |
|---|---|---|---|---|---|---|
| 3½% கவர்ன்மெண்டு பேபர் | 62 | 11 | 0 | 63 | 7 | 0 |
| 4% கடன் 1931—36 | 88 | 12 | 0 | 89 | 8 | 0 |
| 4% கடன் 1934—37 | 87 | 12 | 0 | 88 | 8 | 0 |
| 4% கடன் 1960—70 | 72 | 12 | 0 | 73 | 8 | 0 |
| 4½% பாண்டு 1934 | 93 | 15 | 0 | 94 | 11 | 0 |
| 4½% கடன் 1955—60 | 82 | 6 | 0 | 83 | 2 | 0 |
| 5% யுத்தக்கடன் 1929—47 | 93 | 13 | 0 | 94 | 9 | 0 |
| 5% பாண்டு 1935 | 94 | 14 | 0 | 95 | 10 | 0 |
| 5% கடன் 1939—44 | 92 | 4 | 0 | 93 | 12 | 0 |
| 5% பாண்டு 1933 | 98 | 12 | 0 | 99 | 8 | 0 |
| 5% கடன் 1945—55 | 100 | 8 | 0 | 101 | 4 | 0 |
| 6% பாண்டு 1931 | 99 | 13 | 0 | 100 | 9 | 0 |
| 6% பாண்டு 1932 | 100 | 8 | 0 | 101 | 4 | 0 |
| 6% பாண்டு 1933/36 | 99 | 5 | 0 | 100 | 1 | 0 |
| 5½ " மைசூர் கடன் 1938 | 100 | 8 | 0 | 101 | 0 | 0 |
| 6¼% மைசூர்கடன் 1940 | 104 | 0 | 0 | 104 | 8 | 0 |
| 6½% ,, 1941—51 | 112 | 0 | 0 | 112 | 8 | 0 |
| 7% ,, 1931 | 101 | 6 | 0 | 101 | 14 | 0 |

---

## ரேவு மார்க்கெட்.

குறிப்பு:—மூட்டை விலைகளுக்கு லாட்டலி ரு. 0—0—9 பை சேர்த்துக்கொள்ள வேண்டியது.

குருணை :—

| | முதல் ரு. | அ. | பை. | வரை ரு. | அ. | பை |
|---|---|---|---|---|---|---|
| ரங்கூன் குருணை ஆபீஸ்ரகம் (190 ரா) மூ 1க்கு | | | | | | |
| A-1 | 9 | 0 | 0 | 11 | 0 | 0 |
| A-2 | 8 | 4 | 0 | 9 | 8 | 0 |
| A-3 | 7 | 8 | 0 | 9 | 0 | 0 |
| B-1 | 8 | 0 | 0 | 9 | 8 | 0 |
| B-2 | 7 | 8 | 0 | 8 | 12 | 0 |
| B-3 | 7 | 0 | 0 | 8 | 8 | 0 |
| C-1 | 7 | 0 | 0 | 8 | 0 | 0 |
| C-2 | 6 | 8 | 0 | 7 | 8 | 0 |
| C-3 | 6 | 0 | 0 | 7 | 4 | 0 |
| பஜார் நெ. 1 | 8 | 0 | 0 | 9 | 0 | 0 |
| ,, நெ. 2 | 7 | 0 | 0 | 8 | 8 | 0 |
| ,, நெ. 3 | 6 | 0 | 0 | 7 | 0 | 0 |
| ,, நெ. 4 | 5 | 0 | 0 | 6 | 12 | 0 |
| செய்கோன் நொய் 0 ரா. | | | | | | |
| நெ. 1 | 9 | 8 | 0 | 10 | 8 | 0 |
| ,, நெ. 2 | 8 | 8 | 0 | 9 | 0 | 0 |

பச்சரிசி:—

| | | | |
|---|---|---|---|
| மில்ச்சர் அரிசி 164 ரா | 7¼—9½ | | |
| டில்லி போகம் அரிசி 166 ரா. | 9 | 12 | 0 |
| தெலுலி 166 ரா. | 9 | 0 | 0 |

புட்டரிசி:—

| | | | |
|---|---|---|---|
| புட்டரிசி (வெள்ளை) 140 ரா. மூ. 1-க்கு | 11 | 12 | 0 |
| ,, (கருப்பு) ,, | 12 | 14 | 0 |

புழுங்கல் அரிசி:—

| | | | |
|---|---|---|---|
| சிலேட் புழுங்கலரிசி 164 ரா | 7½—8 | | |
| சீதாசா அரிசி 166 ரா. | 9—9¼ | | |
| நெ. 2 8 14 0 | 9 | 0 | 0 |
| லாங் பாடி அரிசி | 7 | 8 | 0 |
| டெல்டா மெஷின் 1 நெ. 162 ரா. மூ. 1-க்கு | 8 | 0 | 0 |
| ,, நெ. 2. மேல்தரம் | 7 | 12 | 0 |
| ,, ,, நடுத்தரம் | 7 | 8 | 0 |
| ,, கீழ்த்தரம் | 7 | 0 | 0 |
| உள்ளூர் வாடன்சம்பா | 8 | 8 | 0 |
| ,, கார் (சிகப்பு) | 7 | 0 | 0 |
| ,, சிறுமணி | 10 | 0 | 0 |
| காகுரு பழயது | 9 | 0 | 0 |
| ,, புதியது | 8 | 8 | 0 |

நவதான்யங்கள்:—

| | | | |
|---|---|---|---|
| மொச்சை சுஜின் 178 ரா. ஸ்டாக்கில்லை | | | |
| ஷை மாந்தனை ,, | 9—10½ | | |
| ரங்கூன் பயறு 195 ரா | 9 | 0 | 0 |
| ஸிங்கப்பூர் பயறு 200 ரா. | 11 | 8 | 0 |
| சிகப்பு பீன்ஸ் புதியது 190 ரா மூ. 1-க்கு | 7—8 | | |
| ரங்கூன் வெள்ளைபீன்ஸ் 192 ரா. | 6 | 8 | 0 |
| கருப்பு மூக்கு பட்டாணி | 11 | 8 | 0 |
| ஆரு பட்டாணி | 10 | 8 | 0 |
| ரங்கூன் காராமணி | 9—10 | | |
| ஜாவா காராமணி 200 ரா. பெரியது | 10 | 12 | 0 |
| ,, சிறியது | 10 | 6 | 0 |
| ரங்கூன் உளுந்து 218ரா | 11 | 12 | |
| ராஜ நன்கம் உளுந்து 220 ரா. | 11 | 0 | 0 |
| கடகம் உளுந்து 218 ரா. மூ. 1-க்கு | 10 | 8 | 0 |

கடலை:—

| | | | |
|---|---|---|---|
| கராச்சி கடலை 205 ரா. | 10 | 12 | 0 |
| பஞ்சாப் ¾ கடலை | 10 | 8 | 0 |
| பஞ்சாப் கடலை 205 ரா | 10 | 8 | 0 |
| பியா கடலை 205 ரா | 8 | 12 | 0 |
| ரங்கூன் கடலை புதியது 195 ரா. | 9—10 | | |
| கல்கத்தாகடலை 192 ரா. நெ. 1 | 8¼—9½ | | |

கடலை பருப்பு:—

| | | | |
|---|---|---|---|
| ரங்கூன் கடலைபருப்பு 190 ரா. | 10 | 11 | |
| கராச்சி கடலைபருப்பு 208 ரா. ஸ்டாக்கில்லை | | | |
| கல்கத்தா கடலை பருப்பு 192 ரா. 9 14 0 | 10 | 12 | 0 |
| கேசரி பருப்பு 192 ரா. | 9 | 0 | 0 |

துவரம் பருப்பு:—

| | | | |
|---|---|---|---|
| கல்கத்தா205 ரா | 9½—11 | | |
| கான்பூர்205 ரா. | 1½—11 | | |
| கேஸரி மெஷின் 205 ரா. | 11 | 0 | 0 |
| ,, நெ. 2 ,, | 10 | 12 | 0 |
| ,, நெ. 3 ,, | 10 | 8 | 0 |
| மைசூர் கொள்ளு 51 படி மூ. 1-க்கு | 5 | 8 | 0 |
| ரங்கூன் துவரை 190ரா | 10—11½ | | |
| மலேத் துவரை40 படி | 7—9 | | |

கோதுமை, மாவு-

| | | | |
|---|---|---|---|
| சோ துமை கண்டவா | 11 | 0 | 0 |
| மரிக்கன் மாவு | 10 | 4 | 0 |
| கடலை மாவு விஷ்ணுமார்க்கு | 11 | 8 | 0 |
| ,, சிவாஜி மார்க்கு | 11 | 4 | 0 |

---

## இரும்பு எஃகு சாமானகள்.

| | முதல் ரு. | அ. | பை. | வரை ரு. | அ. | பை |
|---|---|---|---|---|---|---|
| ஆர். ஸ்டீல் கர்டர்கள் (காண்டிலெண்டல்) அந்தர் 1-க்கு | 5 | 8 | 0 | 6 | 12 | 0 |
| ஆர். ஸ்டீல் கர்டர்கள் டார்மெனலர்வகு) அந்தர் 1-க்கு | 7 | 8 | 0 | 8 | 0 | 0 |
| மைல்டு ஸ்டீல் சானல்கள் (காண்டினென்டல்) அந்தர் 1-க்கு | 6 | 12 | 0 | 7 | 8 | 0 |
| மைல்டு ஸ்டீல் சானல்கள் (டார்மென்லாங்கு) அந்தர் 1-க்கு | 8 | 0 | 0 | 9 | 8 | 0 |
| எக்ஸ்பாண்டெட் மேடல் சதுர அடி 1க்கு | | | | | | |
| 3 மெஷ் | 0 | 1 | 0 | 0 | 3 | 0 |
| 1½ மெஷ் | 0 | 1 | 6 | 0 | 2 | 6 |
| ¾ மெஷ் | 0 | 2 | 0 | 0 | 2 | 9 |
| 3/8 மெஷ் | 0 | 2 | 0 | 0 | 3 | 0 |

முள்ளு கம்பிகள்

| | | | |
|---|---|---|---|
| ரோல் 1-க்கு 84 ராத்தல் ரு. | 8 | 12 | 0 |
| ,, அந்தர் 1-க்கு ரு. | 11 | 8 | 0 |

துத்துநாகம் வளைவு தகடுகள்

| | | | |
|---|---|---|---|
| 6, 7, 8, 9 அடி—24 அந்தர் 1க்கு ரு. | 11 | 6 | 3 |
| 10 அடி—24 ,, | 11 | 8 | 3 |

கண்டி 1-க்கு விலை கீழ்க்கண்டவாறு:—

| | | | |
|---|---|---|---|
| சட்டம் ¾×¼ ரு. | 33 | 0 | 0 |
| கிராணைக்கம்பி 7/16, 8 | 26 | 0 | 0 |
| ,, 15/32, ½ 27 8 0 | 28 | 0 | 0 |
| ,, 5/8 மு 1 வரை | 27 | 0 | 0 |
| சதுரம் 7/16 | 26 | 0 | 0 |
| ,, 15/32, ½ | 26 | 8 | 0 |
| ,, 5/8 மு 2 வரை | 27—28 | | |
| இருசு துண்டு 1½ மு 2 வரை | 27½—30 | | |
| சதுரக்கட்டு 6 அடி 12 அடி 3/16 மு 3/8 வரை | 22½—23½ | | |
| பொத்துச் சட்டம் 1¼ > ⅜ முதல்1¾ × வரை | 32 | 0 | 0 |
| சீமைச் சட்டம் 1 × ¼ முதல் 4 × வரை | 65 | 0 | 0 |
| சீமை இருசு துண்டு 1¼ முதல் 2 வரை | 62—70 | | |
| தீகடு கட்டு 2 தகடுகள் | 31 | 0 | 0 |
| ஷை 3, 4, 5 | 35 | 8 | 0 |
| ஷை 6, 7 | 42 | 0 | 0 |
| 8, 9 | 42 | 8 | 0 |
| ஷை 10, 11, 12, 13 | 44 | 0 | 0 |
| வில்கட்டு 1 × ¼ முதல் 2 > ½ | 38.-40 | | |
| பீப்பா கட்டு ¾×1/16 மு 2×1/16 வரை | 30 | 0 | 0 |
| ஷை ¾×⅛ | 30 | 0 | 0 |
| ஷை 1×⅛ மு 4×⅛ வ | 31 | 8 | 0 |
| மட்ட எஃகு 1 | 25 | 8 | 0 |
| ,, 1 1/8 | 25 | 8 | 0 |
| ,, 1¼ | 24 | 8 | 0 |
| உயர்ந்த எஃகு ஷை | 30 | 0 | 0 |
| உளிக்கட்டு L A X | 18 | 8 | 0 |
| L× மார்க்கு | 18 | 0 | 0 |
| லாடாணி o | 43 | 0 | 0 |
| ,, oo | 46 | 0 | 0 |
| ஆணி பீப்பாய் 7 4 0 | 8 | 4 | 0 |
| சாதா தகடு 26 கேஜ் | 13 | 8 | 3 |
| 24 கேஜ் | 12 | 4 | 3 |

பழைய அரம் பட்டை

| | | | |
|---|---|---|---|
| மணங்கு 1 க்கு | 3 | 0 | 0 |
| "சதுரம்" | 4 | 0 | 0 |

மண்வெட்டி டெஜன் 1-க்கு

| | | | |
|---|---|---|---|
| முதலை மார்க்கு சிகப்பு லேபில் | 8 | 4 | 0 |
| ,, பச்சை ,, | 7 | 4 | 0 |
| ரெட்டைக்கொடி | 7 | 0 | 0 |
| பூ மார்க்கு | 7 | 14 | 0 |
| கடாமார்க்கு | 6 | 14 | 0 |
| தராசு ,, | 6 | 10 | 0 |
| குதிரை ,, | 9 | 0 | 0 |




## ஜலமும் அதன் வேற்றுமையும்.

I

(கௌசிகன் எழுதியது.)

நாம் வாசஞ் செய்யும் இந்த பூமியில் உள்ள நில பாகத்தையும் நீர் பாகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நீரின் பரப்பே அதிகமானது. இப்படி ஒப்பிடுகையில் கடல், மகா சமுத்திரம் போன்ற பெரிய நீர் நிலைகளையே மனதில் கொள்ளுகிறோம். கண்ணால் பார்க்கக் கூடிய இந்த ஜலபாகங்கள் தவிர கண்ணுக்குத் தெரியாமலும் வேறு உருவத்தோடு ஜலம் ஆவிரூபமாய் எங்கும் பரவியிருக்கிறது. எப்போதும் இருக்கும் ஜலம், நீராவி தவிர்த்து தண்ணீர் சிற்சில விடங்களில் அல்லது ஒரே யிடத்தில் சில குறிப்பிட்ட காலங்களில் பல உருவமாகக் காணப்படும். பனிக்கட்டி, ஆலங்கட்டி, உறைபனி, பனியாறு போன்ற கெட்டிப்பதார்த்தங்களும், பனி, மூடு பனி, மேகம், போன்ற ஆவிரூபங்களும்மழை போன்ற த்ரவபதார்த்தஉருவமும் சாதாரண ஜலத்தின் உருவங்களாகும். ஒரே ஸ்வரம் ஸ்தாயி பேதத்தால் கீழ்மேல் என்று பகுத்து உணரப்பட்டாலும்ஒரே ஸ்வர அக்ஷரத்தால் உணர்த்தப்படுவது போல தெர்மாமிடரில் 0-100டிகிரி இதற்குஉட்பட்ட சூடுடையதாக நீர் இருக்கும் போது அது ஜலஸ்வரூபமாகவும், 100-க்கு மேற்படின் அது ஆவியாயும் 0 டிகிரிக்குக் கீழே போனால் பனிக்கட்டியாய்த் தோய்ந்து கெட்டியாயும் காணப்படும்.

உஷ்ணத்தின் வேறுபாட்டால் நீர் பல உருவமுடையதாய்க் காணப்பட்டாலும் ஒவ்வொரு உருவத்தில் அதற்கு வெவ்வேறு குணங்கள் இருக்கின்றன. நாம் பிரதிதினம் கையாளும் ஜலத்தின் குணம் ஒன்று அனேகருக்குத் தெரியாமலிருக்கலாம். எல்லா வஸ்துக்களும் உஷ்ணத்தால் அதிக இடம் அடைக்கு மென்பதும், குளிரால் இதற்கு எதிரிடையாகச் சுருங்குவதும் பலர் அறிந்த விஷயமாகும். பனிக்கட்டியும் அதிகக் குளிர்ச்சி யுண்டாக்குவதால் குறுகும். இம்மாதிரிப்பொதுவிதிக்கு ஜலமே ஒரு சமயத்தில் மாறுபட்டு நடக்கிறது. 0 டிகிரியிலிருந்து ஜலத்தை சூடுண்டாக்கிக் கொண்டே போனால் ஜலத்தின் அளவு பொது விதிப்படி விரிவு பட்டுக்கொண்டு போக வேண்டியது, அப்படி யில்லாமல் 0 டிகிரியிலுள்ள ஜலத்தைவிட டிகிரி 1 யிலுள்ள ஜலம் அதிகமாய்நெருங்கிய அணுக்கள்உள்ளதாயிருக்கின்றது; இதைவிட 2 டிகிரியிலுள்ள ஜலமும், இதைப் பார்க்கிலும் 3 டிகிரியிலுள்ளஜலமும், கடைசியாக இவை எல்லாவற்றையும்விட 4 டிகிரியிலுள்ள ஜலமும் அளவில் குறுகியதாயிருக்கிறது. இதைவேறு வழியாலும் விளக்கலாம். ஒரு உயரமானகண்ணாடிக்குழாய் வாய் குறுகியதாய் எடுத்துக் கொண்டு அது நிறைய பனிக்கட்டி யுருகியதாலுண்டான ஜலத்தை ஊற்றுவோம். அதையே உற்றுநோக்கிக்கொண்டிருந்தால் அதற்குள்தோய்ந்திருக்கும் தெர்மாமிடரிலிருந்து அதன் உஷ்ணம் கொஞ்சம் கொஞ்சமாக ஏறுவது தெரியவரும். உஷ்ணம் ஏறிக்கொண்டே போகும் போது நீண்ட குழாயின் வாய் குறுகலாக இருக்குமாயின் ஜலத்தின் அளவு 10000க்கு ஒன்று வீதம் குறைவதை ஜலம்4டிகிரி வந்ததும் பார்க்க முடிய வேண்டும். இந்த அளவு குறைவது மிகச் சிறியதாயிருப்பதால் நுட்பமான கருவிகளைக்கொண்டு பார்க்கக் கூடியதாயிருக்கும். இது கஷ்டமானதானால் 4டிகிரியிலுள்ள ஜலம் இதைவிட அதிக டிகிரியோ அல்லது குறைவோ உள்ள ஜலத்தைவிட அதிக கனமானதென்று வேறு விதமாயும் ருஜுச் செய்யலாம்.



4 டிகிரியில் தண்ணீர் சுருங்குதல்.




4 டிகிரியிலுள்ள ஜலமே அதிக கனமானது.

ஒரு உயரமான கண்ணாடிப் பாத்திரம், சுமார் இரண்டடி உயரமிருக்கட்டும். இதன் மத்தியில் வெளிப் புறத்தில் பனிக்கட்டித் துண்டுகள் போட்டு ஜலத்தைக் குளிரவைக்க இதைச் சுற்றிலும் ஒரு தட்டு, பாத்திரத்தின் மேல் பாகத்திலும் அடிப்பாகத்திலும் தெர்மாமிடர் சொருகி வைக்க துவாரங்கள், இதைத் தயார் செய்துகொண்டு பாத்திரத்தில் நிறைய சாதாரண ஜலத்தை ஊற்றி நடுவிலுள்ள தட்டில் பனிக்கட்டியை நிறையப் போடுவோம்.

உபா:—நடுத்தட்டில் பனிக்கட்டியைப் போட்டு அதைத் தொட்டுக்கொண்டு பாத்திரத்தின் உள்ளே ஜலமிருந்தால் என்ன நடக்கும்?

ராம:—பனிக்கட்டிக்குச் சமீபத்திலிருக்கும் ஜலம் குளிர்ந்துபோகும்.

உபா:—பாத்திரத்தில் சொருகியிருக்கும் இரண்டு தெர்மாமிடர்களையும் கவனித்துப்பாருங்கள்.

அம்:—இரண்டு தெர்மாமிடர்களும் 30டிகிரியில் இருந்தன. ஆனால் கீழ் தெர்மாமிடர் மாத்திரம் இப்போது 25-க்கு வந்திருக்கிறது; மேல் தெர்மாமிடர் 30 யிலேயே யிருக்கிறது.

உபா:—ராம சேஷு, அம்மாளு சொல்வது சரிதானா பார்.

ராம:—இல்லை, ஐயா, கீழ் தெர்மாமிடர் 19-க்கு வந்து விட்டது; ஆனால் மேல் தெர்மாமிடர் அப்படியே 30 டிகிரியில் நிற்கிறது.

உபா:—பார்த்துக்கொண்டேயிருங்கள். கீழ் தெர்மாமிடர் ஒரு நிலைக்கு வந்த பிறகு சொல்லுங்கள்.

அம்:—கீழ் தெர்மாமிடர் இறங்கிக்கொண்டே போகிறது பார். 5டிகிரிக்கு வந்தும் இன்னும் இறங்குகிறது பார். ராமசேஷு, எவ்வளவு வேகமாய் இறங்குகிறது!

ராம:—4 டிகிரிக்கு வந்து கொஞ்நேரமாற்று. அப்படியே நிற்கிறது ஐயா.

உபா:—இன்னும் கொஞ்ச நேரம் உற்றுப்பாருங்கள். கீழ் தெர்மாமிடர்இறங்கவில்லையா? மேல் தெர்மாமிடர் என்ன காட்டுகிறது?

கீழ் தெர்மாமிடர் 4 டிகிரியிலேயே இருப்பதாக இருவரும் கத்துகிறார்கள். உடனே மேல் தெர்மாமிடரும் இவ்வளவு நாழி கழித்து 30 டிகிரிக்குக் கீழ்வர ஆரம்பிக்கிறது என்று அம்மாளு சொன்னாள். கீழ் தெர்மாமிடர் இறங்கினதைப் பார்க்கிலும் அதிக மெதுவாக மேல் தெர்மாமிடர் இறங்குகிறது. மேல் தெர்மாமிடரும் குறைந்துகொண்டே வந்து மெள்ளமெள்ள 4 டிகிரியை அடைந்தது. இன்னும் கீழ் தெர்மாமிடர் அப்படியே இருக்கிறது. இருவரும் தெர்மாமிடர்களைப் பார்த்து வேறுபாடிருப்பதை வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்கள். கொஞ்சநேரம் அவர்களுக்கு எதுவும் சொல்லச் சந்தர்ப்பம் நேரவில்லை. திடீரென்று அம்மாளு 3 என்றாள்.

உபா: எது?

அம்: மேல் தெர்மாமிடர்.

இதற்குள் நடுத்தட்டில் போடப்பட்டிருந்த பனிக்கட்டி அனேகமாய் உருகி ஜலமாகிவிட்டது. இதற்குஇன்னும் கொஞ்சம் பனிக்கட்டி உடைத்து சிறுதுண்டுகளாகப் போட வேண்டியிருந்தது. போட்டுக் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மேல் கருவி 0 டிகிரியைக் காட்டுகிறது.

உபா: இதுவரையில் நீங்கள் பார்த்ததை படிப்படியாய் இரண்டு மூன்று வாக்கியங்களால் வெளியிட முடியுமா?

ராம: பாத்திரத்திலுள்ள ஜலம் முழுதும் ஆரம்பத்தில் 30· யிலிருந்தது. பிறகு கீழ்க் கருவி 4 டிகிரியைக்காட்டிற்று. கொஞ்ச நேரம் கழித்து மேல் கருவியும் 4க்கு வந்தது. இதற்குப் பின் மேல் கருவி 0 டிகிரி வரை எட்டியது.

உபா:—இப்போது நீங்கள் பார்த்தது ஒவ்வொன்றையும் பற்றி நினைத்து அதற்குக் காரணம் கண்டுபிடிக்க முயலுவோம். முதலில் கீழ் தெர்மாமிடர் உஷ்ணத்தில் இறங்கி 4 டிகிரிவரை போயிற்று. ஏன்?

அம்: குளிர்ந்த ஜலம் உஷ்ணமான ஜலத்தைவிட அதிக அடர்த்தி; ஆகையால் அதிக கனமுடையது. உஷ்ணமான ஜலம் மேலேயும் குளிர்ந்த ஜலம் கீழேயும் போகிறது.

உபா: கீழேஉள்ள ஜலம் 4 டிகிரியிலேயே இருப்பதால் நாம் என்ன ஊகிக்கலாம்?

ராம: 4 டிகிரியிலுள்ள ஜலம் மற்ற மேல்டிகிரிகளில் உள்ள ஜலத்தைவிட கனமானது.

உபா:—மேலேயுள்ள கருவியும் 4க்கு வந்தபோது இந்த மாறுதல் வெகு மெதுவாக நடந்தது, பார்த்தீர்களா?

அம்:—கனமான ஜலம் கீழே போவது வெகு சுலுவான வேலே. நடுத்தட்டுக்கு மேலேயுள்ளஜலம் குளிரும்போது அடியிலிருந்து படிப்படியாய் குளிர்ச்சி 'கண்டக்ஷன்' என்ற முறைப்படி பரவ வேண்டியிருக்கிறது. அதனாலே தான் அதிக தாமதம் உண்டாயிற்று.

உபா: மேல் ஜலமும் 4 டிகிரிக்கு வந்த பிறகு, அதாவது பாத்திரத்தில் உள்ள ஜலம் முழுதும் 4 டிகிரியிலிருக்கும் போது நடுத்தட்டிலுள்ள பனிக்கட்டியின் வேலேயென்ன?

ராம: உடைத்துப்போடும் பனிக்கட்டித் துண்டுகள் 0-டிகிரி யிலிருப்பதால் அதன் கிட்ட இருக்கும் ஜலமும் இதே குளிர்ச்சி நிலேக்குவரும். 4 டிகிரி யிலுள்ள ஜலம் 3 டிகிரிக்கு வருவதாக வைத்துக்கொள்வோம். கீழ்க்கருவி 4 டிகிரியையே காட்டினபடியால் அந்த 3 டிகிரி ஜலம் கீழே வரவில்லே. மேலேயுள்ள கருவி 3 டிகிரியைக் காட்டினதால் 3 டிகிரிக்கு வந்த ஜலம் மேலே போயிற்று. 30 டிகிரியிலிருந்து உஷ்ணம் தணிந்து கொண்டு வரும் போது 4 டிகிரி வரையில் தண்ணீர் கீழே வந்தது. 4 டிகிரிக்குக் கீழே போகும் போது தண்ணீர் மேலே போகிறது. 4டிகிரிக்குவருமட்டும் தண்ணீரின் அணுக்கள் நெருக்கமாகின்றன, அதாவது தண்ணீர் கனத்துக்கொண்டே போகிறது; வரவா குறைந்த இடத்தைஅடைக்கிறது. 4டிகிரிக்குகீழே போம்போது தண்ணீர் விரிவடைந்து லேசாகின்றது. 4டிகிரிக்கு மேலும் தண்ணீர்லேசு, 4டிகிரிக்குக் கீழும் தண்ணீர்லேசு, அதாவது4டிகிரியிலேயே அதிக எடையுள்ளது. இந்த4டிகிரியிலுள்ளஜலத்தில்ஒருகன சென்டிமிடர்தான் ஒருகிராம்என்கிறோம்5டிகிரியிலிருந்தாலும்3டிகிரியிலிருந்தாலும் ஒரு கன சென்டிமிடர் ஜலம் ஒரு கிராமைவிடக் குறைந்தஎடையுள்ளது. 4டிகிரியில் 10000 கன சென்டிமிடர் ஜலம் எடுத்துக்கொண்டால் அது 0டிகிரிக்குப் போகையில் 10001 கன சென்டிமிடர் ஜலமாக அளவில் அதிகரிக்கிறது. கொஞ்சம் ஜலத்தின் அளவு உரலேப்போல் 4டிகிரி வரும் போது நடுவில் சிறுத்தும் அதற்கு மேலும் கீழும் அளவில் பருத்தும் இருக்கும்.

சிறுவர் கதை

## வேலேக்காரன் அரசனான கதை.

மதுரையில் ஆட்சி புரிந்து வந்த பாண்டிய ராஜனுக்கு மங்கைக்கரசி என்ற ராஜகுமாரி இருந்தாள். அவள் நன்முக வித்யைகளே அப்யஸித்தவள். ஆனல் பிடிவாத குணம் பொருந்தியவள். ஒரு நாள் அவள் வைகை நதியில் ஸ்நானம் செய்யச் சென்றுள். ராஜகுமாரி ஸ்நானம் செய்யும் இடத்தில் ஒரு புருஷனும் இருக்கக்கூடாது என்று உத்திரவு செய்திருந்தாள். ஸ்நானம் செய்து முடிந்தபிறகு நதிக்கரையைவிட்டு வெளியேறுகையில்நதிமத்தியிலிருந்த ஒரு திட்டில்ஒரு கம்பீரத் தோற்றமுள்ள வயோதிகரான பிராமண முனிவர் ஒருவர் அங்கு முளைத்திருந்த நீண்ட புற்களே முடிந்து கொண்டிருப்பதைக் கண்டாள். உடனே ராஜகுமாரிக்கு அடங்காக் கோபம் வந்து விட்டது. தனது வேலேயாளே அனுப்பி



அந்த வயோதிகர் யாரென்று விசாரித்து வரச் சொன்னுள்.

வேலேயாள் அவ்விடம் சென்று விசாரித்து வந்து 'அங்கிருப்பவர் பிரம்மதேவன். பூவுலகில் பிறக்கும் ஒவ்வொரு புருஷனுக்கும் அவன் மணக்க வேண்டிய பெண்ணே நிர்ணயித்து முடிந்து விடுகிருர்'' என்று கூறினன். ராஜகுமாரி அதை நம்பாமல் மறுபடியும்வேலேயாளே அனுப்பி தனக்கு யாரை மணவாளனுகவுற்படுத்தியிருக்கிருர் என்பதை அறிந்து வரும்படியாகப் பரிகாசமாகச் சொல்லியனுப்பினுள். வேலேயாள் பிரம்மாவிடம் சென்றவுடன், அடிக்கடி தாம் வேலே செய்து கொண்டிருக்கையில் ராஜகுமாரி சிறிதும் மரியாதையில்லாமல் தொந்தரவு செய்வதைக் கண்டு அவர் கோபங்கொண்டு வேலேயாளே நோக்கி "உனக்கும் அவளுக்கும் கல்



யாணம் நடக்குமென்று உன் எஜமானியிடம் சொல்'' என்று கூறி இரண்டு புற்களே எடுத்து முடிந்துபோட்டார். வேலேயாள் மிகவும் பயந்து இந்த உத்தரவை ராஜகுமாரியிடம் தெரிவித்தால் தனக்கு என்ன தண்டனே கிடைக்குமோ என்று பயந்து நடுநடுங்கினன். ராஜகுமாரி அவனே சவுக்கால் அடித்து நடந்ததைக் கூறும் படியாகச் சொன்னுள். வேலேயாள் பிரம்மதேவர்கூறியதைச் சொன்னன். இதைக் கேட்டதும் ராஜகுமாரிக்குஅடங்காச் சினம் உண்டாகிவிட்டது. கையிலிருந்த சவுக்கால் வேலேயாள் மூர்ச்சையடையும்படியாக அடித்துவிட்டு, அவன் மூர்ச்சை தெளிந்தவுடன் "அந்த கிழவன் உளருவதை சிறிதும் மரியாதையில்லாமல்



என்னிடம் கூறுகிருயா? இந்த ஊரைவிட்டு ஓடிப்போ. இல்லாவிட்டால் உன் உயிர் போய்விடும்'' என்று கட்டளேயிட்டாள்.

வேலேயாள் உயிர்தப்பினேம் என்று ஓடி பாண்டியராஜ்ய எல்லேயைக் கடந்து ஊர் ஊராகத்திரிந்து கொண்டிருந்தான்.

சிறிது நாள் கழித்து மங்கைக்கரசியின் தந்தையான பாண்டியன் அவளேத் தவிர வேறு புத்திர சந்ததியில்லாமல் இறந்து விட்டான். ஆகையால் மங்கைக்கரசியே பாண்டிய ராஜ்யத்திற் கதிபதியாக வேண்டியிருந்தது. ஆனல் ஒரு ஸ்திரீயை அதிபதியாக்கக்கூடாததால் மந்திரிகளெல்லாம் பட்டத்து யானேயிடம் பூமாலே கொடுத்து அது யாருக்கு மாலே சூட்டுகிறதோ அந்த மனிதனுக்கு மங்கைக்கரசியைவிவாகம்செய்வித்துப் பாண்டிய ராஜ்யாதிபதியாக்க ஏற்பாடு செய்தனர். அந்த யானே மதுரையில் ஒருவருக்கும் மாலேயிடாமல் ஊர் ஊராகத்திரிந்து கடைசியில் திருச்சிக்கருகில் வந்து சேர்ந்தது. பாண்டியனுடைய மந்திரி



களும் மேளதாளங்களுடன் அதன் பின்னர் சென்றனர். திருச்சி கோட்டை வாயிலுக்கு முன் களேத்துப் படுத்து றங்கின ஒரு மனிதன் கழுத்தில் யானே மாலேயைப் போட்டது. உடனே மந்திரிகளெல்லாம் அவனே மணக்கோலத்துடன்மேளதாள சகிதமாக மதுரைக்கு அழைத்து வந்தனர். மதுரையில் மங்கைக்கரசிக்கும் அந்தப்புது மனிதனுக்கும் கல்யாணம் நடந்து முடி சூட்டப்பட்டது. அன்றிரவு மங்கைக்கரசி தன் கணவனுக்கேற்ற பணிவிடைகளேச் செய்துகொண்டு, தன் கணவன் புத்திமானுகவும், வித்யாவானுகவுமிருப்பதைக் கண்டு



சந்தோஷித்து அவனுடைய பூர்வீகக் கதையைக் கேட்டாள். அவள் கணவன் தனது முதுகைக் காண்பித்து அவளிடம் வேலேயாளாகவிருந்து சவுக்கடி பட்டு ஏற்பட்ட காயத்தின் தழும்பைக்காட்டி, தான் ஊர் ஊராகத் திரிந்து பல வித்வான்களுடைய உதவியால் பல கல்விகளேக் கற்று, ஜீவனம் நடத்துவதற்காக திருச்சிக்கு வந்து, பிரயாண சிரமத்தால் களேத்துப் படுத்துறங்கியபோது பிரம்மாவின் கட்டளேப்படி அவனே மணக்க நேர்ந்த வரலாற்றை விஸ்தாரமாகக் கூறினன்.